# கேளாத கானம்

முதலிய கதைகள்




'சோமு'



பாரி நிலையம்
59, பிராட்வே · சென்னை 1.




# உள்ளுறை

முன்னுரை : சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

நன்றி :

# முன்னுரை

வயதில் என்னைவிடச் சிறியவர்களாயி னும் படிப்பிலும் ஊக்கத்திலும் இலக்கிய ஆக்கத் திறமையிலும் என்னைவிட மேம் பட்டவர்கள், தங்களுடைய நூல்களுக்கு என்னை முன்னுரை எழுதச் சொல்கிறார் கள். ஒருவர் எழுதிய நூலுக்கு மற்றொரு வன்—அதிலும் எழுத்துத் திறமையிலும் படிப்பிலும் அந்த ஆசிரியரைவிட தான் குறைந்தவன் என்று நன்றாக உணர்ந் தவன் ஒருவன்—முன்னுரை எழுதப் புகுவது, பலவகை மடமைகளில் ஒன்று என்பது என் கருத்து.

ஆயினும் 'சோமு', காலம்சென்ற டி. கே. சி. பெருமாளால் இருபது ஆண்டுகளுக்கு முன் எனக்கு அறிமுகப்படுத்தப்பட்டவர். அவர் எழுதிய நூலுக்கு என் முகவுரை அன்பில் பிறந்த ஒரு ஆசீர்வாதமாகும். ஆனபடியால் மனதில் உண்டாகிய ஆட்சே பனையைத் தள்ளிவிட்டு எழுதுகின்றேன்.

பரத நாட்டியத்தில் காட்டப்படும் பாவங்களும், பழைய சித்தர் பாடல்களில் உள்ள வேதாந்தச் சிரிப்பும், இன்னும் மற்றப் பழம் பெரும் தமிழ் நூல்களிலுள்ள அறிவும்—இவையெல்லாம் சேர்ந்து ஒரு தனிப் பண்பு தருகின்றன, 'சோமு'வின் கதைகளுக்கு.

பழைய நூல்களைப் பக்தியோடு நன்ருகப் படித்துணர்ந்தவர் 'சோமு'. அவற்றின் சுவை ஏறிய உள்ளம் அவர் உள்ளம்.

வேறு நாடுகளில் வேறு சரித்திரத்தின் பயனுகத் தோன்றிய கருத்துக்களை எடுத்துக் கொண்டு முலாம் பூசித் தந்த பொருள்கள் அல்ல; வெளிநாட்டுப் பித்தளைக்குத் தமிழ்க் 'கலாயம்' போட்ட பாத்திரங்கள் அல்ல; 'சோமு'வின் கதைகளில் காணும் பாத்திரங்கள் உண்மையான தமிழ் வெண்கலப் பாத்திரங்கள், கணீர் என்று தமிழோசை தரும் பாத்திரங்கள்.

சுத்தமான தமிழுங்கூட. இதையும் சொல்லுவது அவசியம் என்று எண்ணுகிறேன்.

நிகழ்ச்சிச் சிக்கலும் வேடிக்கையும் குறும்பும் வேண்டுவோர், இந்தக் கதை

களில் அவற்றைக் காணார். வாழ்க்கையில் இருக்கும் துக்கங்களும் துயரங்களும் போதாவென்று இல்லாத கதைத் துக்கத்தை உண்டாக்கிக்கொண்டு அழச் செய்யும் துயரக் கதைகளுமல்ல. உள்ளத்தைச் செம்மைப் படுத்தும் கதைகள். பண்பாட்டைக் கெடுக்கும் கதைகள் அல்ல. பண்பாட்டை வளர்க்கும் எழுத்து.

இன்னும் சொல்ல வேண்டியவையெல்லாம் சொல்ல முன்னுரையில் இடம் காணாது. தமிழ் இளைஞர்களும் மகளிரும் நிதானமாகப் படித்துச் சிந்தனை செய்ய வேண்டிய கற்பனைக் கதைகள் அடங்கிய நல்ல நூல் இது.

இங்ஙனம்

தியாகராய நகரம் }
16—2—55 }
சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

# நன்றி

'கேளாத கானம்' என்ற இந்தத் தொகுதி, 'கல்கி', 'ஆனந்த விகடன்', 'கலைமகள்' 'அமுத சுரபி'—ஆகிய பத்திரிகைகளில் வெளிவந்த சிறு கதைகளின் திரட்டு. இவற்றை வெளியிட்ட அன்பர்களுக்கு என் வந்தனம்.

இந்த நூலுக்கு அணிகலமாக மதிப்புக்கு உரிய ராஜாஜி முன்னுரை தந்து ஆசீர்வதித்த அன்புக்கு வணக்கம் செலுத்துகிறேன்.

பாரிநிலையத்தினர் இந்த வெளியீட்டில் எடுத்துக்கொண்ட விசேஷ கவனத்துக்கு நன்றி.

சென்னை<br>16-2-55 } சோமு




# கேளாத கானம்

"தமிழ்நாட்டின் சங்கீதம் என்றால், தேவாரங்களும் அவற்றை ஒட்டிய பண்களுந்தான் என்று, இதுவரை நினைத்திருந்தேன். ஆனால் இந்தக் கோவிலைப் பார்த்த பிறகு என் கருத்தை மாற்றிக் கொண்டு விட்டேன்!" என்று சொன்னார், என்னோடு வந்த வடநாட்டு நண்பர். வடநாட்டுச் சங்கீதத்தில் மிகவும் தேர்ச்சி பெற்ற ஒரு பெரிய பாடகர் அவர்.

"நீங்கள் சொல்வது உண்மையான வார்த்தை. தமிழ் நாட்டில், சங்கீதம் என்ற கலை, எத்தனையோ பல நூற்றாண்டுகளாய்ப் பல துறைகளிலும் உன்னதமாக இருந்து வந்திருக்கிறது. தேவாரம் முதலிய துதிகீதங்களின் பண்களோடு, நாகஸ்வரம், புல்லாங்குழல், வீணை போன்ற வாத்தியங்களும், நாட்டியமும் நாடகம் போன்ற அருங்கலைகளும், இந்த நாட்டில் மிகவும் மேன்மையான நிலையில் இசையை வளர்த்து வந்திருக்கின்றன" என்றேன்.

"ஆனால் இவற்றில் வழங்கி வந்த பாடல்களையும், இசை மரபுகளையும் பற்றி நீங்கள் சிந்தித்துப் பார்ப்பதே இல்லை" என்றார் நண்பர்.

மதுரைக் கோவிலின் ஆயிரங்கால் மண்டபத்துக்கு உள்ளே நுழைந்தோம். "உங்களுடைய ஆராய்ச்சிக்கு இந்த மண்டபத்தினுள் அநேக விஷயங்கள் இருக்கின்றன. உள்ளே போங்கள்" என்று சொல்லிவிட்டு, படியிலே உட்கார்ந்து என்

மனத்தில் எழுந்து வந்த ஏதேதோ எண்ணங்களைப் பின்தொடர்ந்தேன்.

## 2

கடம்பவன நாதர் என்ற யாழ்ப்பாணரின் மரபிலே நைவள நாதர் என்ற ஒரு மகான் இருந்தார். தமிழ் நாட்டில் பூர்வந்தொட்டு வழிவழியாக வந்த இசையையும், அதோடு ஒட்டிய கலைகளையும் நன்கு கற்றுத்தேர்ந்து நிகரற்ற நிபுணராக அவர் விளங்கினார். கன்னிகைகள் பலர் அவரிடம் நாட்டியக் கலை பயின்றார்கள். இளம் மாணவர்கள் பலர், வீணை, புல்லாங்குழல் முதலிய வாத்தியங்கள் கற்றார்கள். இன்னும் சிலர், அவரிடம் குரலிசை பயின்று வந்தார்கள். மதுரை வட்டத்தில், அவரை அறியாதவர் இல்லை. மூன்று ஸ்தாயிகளில், அபாரமான இலாகவத்தோடு உலாவிவரக் கூடிய நயமான குரல் படைத்தவர் என்பதில், நைவள நாதரைப் பற்றி எல்லையில்லாத புகழ்.

இப்படிப்பட்ட அதிசயமான இசைவாணர், தம்முடைய ஒரே புதல்வனை இந்தள குமாரனுக்கு இருபது வயது வரை சங்கீதமே சொல்லிவைக்கவில்லை என்றால், யார்தான் ஆச்சரியப்படாமல் இருப்பார்கள்? அதிலும் நுட்பமான அறிவும், சங்கீதம் என்றால் அளவு கடந்த ஆர்வமும் கொண்ட ஒரு மகனுக்கு, சங்கீத வாசனையே வேண்டாம் என்று இவர் ஒதுக்கினால்?

மாணவர்களில் யாருக்கும் இந்த விநோதத்தை அவரிடம் கேட்கப் பயம்! மற்றவர்களுக்குமே இதைக் கேட்டுத் தெரிந்துகொள்வதற்கு வேண்டிய துணிவு இல்லை! அவ்வளவு கண்டிப்பான மனிதர் அவர்.

வயதாக வயதாக, நைவள நாதர் தமது மாணவர்களின் எண்ணிக்கையையும் குறைத்துக்கொள்ள

ஆரம்பித்தார்! பையனுக்கோ ஒரே துடிப்பு! அவனுடைய மனசில் பெருகிக் கொண்டிருந்த சங்கீதப் பித்து, மாணவர்களோடு குருநாதர் இருந்து பாடும்போதெல்லாம் அவனைப் பிடித்து என்னவோ செய்தது! தானும் பாடவேண்டும் என்று உதடு துடிக்கும். தகப்பனார் இதைப் புரிந்து கொண்டாலும், கவனிக்காததுபோல் இருந்து விடுவார். இந்தள குமாரனுக்கு இதயம் குமுறும். என்ன செய்வான்?

பொறுத்துப் பொறுத்துப் பார்த்தான். ஒரு நாள் குமாரன் தந்தையிடம் நேருக்கு நேராகவே கேட்டுவிட்டான்: "அப்பா, இத்தனை நாளும் சும்மா இருந்து விட்டீர்கள். இனியாவது என்னைப் பாட அனுமதிக்க மாட்டீர்களா? இன்றுவரை கேள்வி மூலம் என் காதிலே பட்டுள்ள சங்கீதமே போதும், மீன் குஞ்சுக்கு நீந்தச் சொல்லிக் கொடுக்க வேண்டாம். அநுமதி மட்டும் கொடுங்கள், பாட ஆரம்பிக்கிறேன்!" என்றான்.

நைவள நாதர் சிரித்தார். சொன்னார்: "குமாரா, இந்த அனுமதி ஒன்றை மட்டும் கேளாதே. வேறு எந்தக் கலைக்கும் உனக்கு என் ஆசீர்வாதம் உண்டு. சிற்பியாகவோ சித்திரகாரனாகவோ, பயிற்சி பெறு. தடையில்லை. ஆனால் சங்கீதம் மட்டும் உனக்கு வேண்டாம்!"

தந்தையின் குரலில் கண்டிப்புக்கு மேலாக ஒரு விவரிக்க ஒண்ணாத வேதனை இருந்தது. இந்தள குமாரன் அதைக் கவனித்தான். அதற்குமேல் அன்று அவரை அவன் தொல்லைப்படுத்த விரும்பவில்லை.

## 3

மதுரைக் கோவிலைப் புதுப்பிக்கும் பணி அரிய நாதருடைய பெரும் முயற்சியால் தீவிரமாக நடந்து

கொண்டிருந்தது. அதைப் பார்த்து வருவதற்காகக் கோவிலுக்குச் சென்ற இந்தள குமாரன், அங்குள்ள சிற்பங்களையும் ஓவியங்களையும் கண்டுவிட்டு, ஒரே அதிசயத்தோடு வீடு திரும்பினான். தகப்பனார் கேட்டார், "குமாரா, கோவிலில் என்ன கண்டாய்?" என்று! மகன் சொன்னான்: "நம்முடைய தமிழ் நாட்டின் சிற்பச் செல்வமும் ஓவிய நிதியும் எவ்வளவு அற்புதமானவை என்பதை இன்றுதான் கண்குளிரக் கண்டேனப்பா. அங்கிருந்து திரும்பவே மனம் இல்லை!"

தகப்பனார் சிரித்தார். "சங்கீதம் சங்கீதம் என்று பைத்தியமாக நிற்பாயே. அந்தச் சங்கீதத்தை எங்காவது கண்டாயா?" என்று கேட்டார் அவர். குமாரனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"சங்கீதத்தை எங்காவது காண்பது என்று உண்டா? கோவிலில் எத்தனையோ பேர் அற்புதமாகப் பாடினார்கள்! குழலும் வீணையும் இயம்பின! கேட்டேன்."

தகப்பனார் சொல்லுவார். "எத்தனையோ பல ஆண்டுகளுக்கு முன் மறைந்துபோன சிற்பிகள் அங்கே தாங்கள் செதுக்கிய சிலைகளில் வாழ்கிறார்கள். பார்த்தாய். எத்தனையோ பல நூறு வருஷங்களுக்கு முன் வாழ்ந்த ஓவியர்கள், தங்களுக்குப்பின் தோன்றக்கூடிய மக்களுக்கு என்று, தங்கள் கைவண்ணத்தைச் சுவர்களிலே பதித்துப் போயிருக்கிறார்கள். அவற்றையும் பார்த்தாய். ஆனால், எந்தச் சங்கீத வித்துவானாவது தன்னுடைய இசைக்கு அந்தக் கோவிலிலே இடம் கண்டானா, பார்த்தாயா? எந்த வித்துவானாவது அந்தக் கோவிலிலே இன்று நிரந்தரமாக நிற்கிறானா, சொல். வாத்தியங்கள் காட்சிப் பொருள்களாக நிற்கும். ஆனால் அவற்றிலே தவழ்ந்த இசை? அது அந்தந்த வித்துவான்களோடு சரி."

தகப்பனருடைய குரலில், கருத்தின் உறுதி இருந்தது. அந்த உறுதி காரணமாகவே, ஒலியில் துக்கம் மிதந்தது. மகன் சொல்லுவான்: ''சிஷ்ய பரம்பரை என்று ஒன்று இருக்கிறதல்லவா? ஒரு கலைஞனுக்குப் பிறகு, அவனை நிரந்தரமாக்குவது அதுதானே?''

பளிச்சென்று பதில் வந்தது, தகப்பனரிட மிருந்து :

''சிற்பம், ஓவியம், கவிதை ஆகிய எல்லாக் கலை களுக்குமே சிஷ்ய பரம்பரை உண்டுதான்! அதோடு இந்த மூன்று கலைகளுக்கும் இன்னொரு விசேஷச் சிறப்பும் இருக்கிறது. ஒரு சிற்பி தன்னுடைய கலையை அப்படியே கல்லில் பொதிந்து வைத்து விட்டுப் போகிறன். ஓவியன், தன் திறமைகளை யெல்லாம் வர்ணங்களிலே கொட்டி வைத்துவிட்டுப் போகிறன். ஒரு கவிஞன், தன்னுடைய ஆன் மாவையே ஏடுகளில் பொறித்து வைத்துவிட்டுப் போகிறன். சிஷ்ய பரம்பரையை மட்டுமே நம்பி, இவர்கள் உயிர் வாழ்வதில்லை. ஆனல் சங்கீதக் காரன் காரியம் அப்படியில்லை! காற்ருேடு காற்ருய்ப் போய்விடுகிற அவசர அநித்தியம் அது! சிஷ்ய பரம்பரையை-சில சமயங்களில் அதன் விபரீதமான கோணல்களையும் - நம்பித்தான் அவன் வாழ வேண்டும்! அதனுலேதான் நம்முடைய தொன்மை யான சங்கீதத்துக்கு ஆதாரமான வடிவமே இல்லாது போய்விட்டது!''

இந்தள குமாரன் தன்னுடைய கோவில்-அனுபவங்களோடு, தந்தையின் வார்த்தைகளை ஒப் பிட்டுப் பார்த்துக்கொண்டே நீண்ட நேரம் கலக்கத் துடன் உட்கார்ந்துவிட்டான்! தன்னைச் சிற்பம் அல்லது ஓவியம் பயிலும்படி தகப்பனர் சொன்ன தன் பொருள், அவனுக்கு இப்பொழுதுதான்

விளங்கியது. ஆனாலும் அவன் மனமோ எந்த நேரமும் சங்கீதத்திலே அல்லவா லயித்துக் கிடந்தது—! சொன்னான் :

"அப்பா, என் மனத்தின் ஈடுபாடெல்லாம் உங்களுக்கு நன்றாகத் தெரியும். என்றாலும் தங்களுடைய ஆசையின்படி சிற்பக் கலையைப் படித்து வரவாவது அநுமதி கொடுங்கள்!"

நைவள நாதர் இதற்கும் சிரித்தார்.

"குமாரா, உண்மையான பற்று என்று ஒன்று இருக்குமானால், எந்தக் கலையுமே எளிதில்வசமாகும். நீ நினைக்கிறபடி, அதற்கு அசுர சாதகம் அவசியம் இல்லை. எண்ணங்கள் பழுக்க வேண்டும்; அவ்வளவு தான்!"

4

நைவள நாதர் தம்முடைய மகனுக்குச் சங்கீதம் சொல்லிக் கொடுக்காமலேயே மறைந்தார். ஆனால் மரணத்திற்குச் சற்று முன்பு, மகனை அருகிலே கூப்பிட்டு, சுத்தியலைக் கொண்டு உளியைத் தட்டுவது போல ஒரு சமிக்ஞை செய்துவிட்டு, இமைகளை மூடினார்.

இந்தள குமாரன் தகப்பனாரின் அந்தக் கடைசி சமிக்ஞையையே, குருவின் மௌன வியாக்கியானமாகக் கொண்டான். உளியையும் சுத்தியலையும் கையிலே எடுத்துக்கொண்டு போய், திருப்பரங்குன்றத்துப் பாறைகளிலே குடியிருக்க ஆரம்பித்து விட்டான்.

ஆமாம்; முறையான பயிற்சி ஏதுமே இல்லாத இந்தள குமாரன், தன்னுடைய உள்ளத்தில் பொங்கி வந்த சங்கீத வெள்ளத்தை யெல்லாம் தடுத்து அணைகட்டி விட்டான். தகப்பனாருடைய அந்த சமிக்ஞையையே கண் முன்னால் நிறுத்திக்

கொண்டு, பாறைகளைச் செதுக்கத் தொடங்கினன்! ஆனல், பாவம்; உருவம் என்று ஒன்றுமே உளியிலே கிட்டவில்லை: உடம்புதான் இளைத்தது.

இந்தள குமாரன் உளியை - அந்த மகத்தான முயற்சியை-கைவிடவில்லை. அநேக நாட்கள், வீட்டிற்குக்கூடத் திரும்புவதில்லை. காட்டிலே கிடைத்த கனிகள், சுனையிலே பெருகும் தண்ணீர்-இவற்றின் துணை கொண்டு, இரவு பகலாகப் பாறைகளோடு உளியும் சுத்தியலுமாகப் போராடிக் கொண்டிருந்தான். களைத்துப் போய் அவன் உட்கார்ந்துவிட்டால் மட்டும், அப்படியே அவனுடைய செவியில் நெடுநாளைத் தொந்தமான சங்கீதம் வட்டம் சுற்றும்!

சில இரவுகளில், பாறைகளிலேயே படுத்துவிடுவான் இந்தள குமாரன். நடு நிசியின் போது, அவன் செவிகளில் ஏதோ தேவகானம் போன்ற இசை கேட்கும். எங்கிருந்தோ யாரோ யாழை மீட்டுவது போலவும், யாரோ அந்த யாழுக்கு இசையத் தெய்வகீதம் பொழிவது போலவும், எங்கோ தொலைவிலே தேவமாதர்கள் சலங்கை குலுங்க நடனமாடுவது போலவும் எல்லாம், அவன் காதில் கேட்கும்! உடனே, எழுந்து கண்களைத் துடைத்துக் கொள்வான் இந்தளன்!

## 5

அன்று பௌர்ணமி. வானமும் பூமியும் பளிச்சென்றிருந்தன! திருப்பரங் குன்றத்துப் பாறைகள் எல்லாம், நிலவின் குளுமையில் நீராடிக் கொண்டிருந்தன! மரஞ்செடி கொடிகள் வெள்ளி இலைகளைக் கல கலத்தன! சந்திரன் என்ற தெய்வ சிற்பி, நிலவு என்ற ஒரு மாபெரும் வெள்ளி மலையைக் குடைந்து, அதில் வெள்ளியினலேயே மரங்களும் செடிகொடிகளும் நீரோடைகளுமே செதுக்கி ஓடவிட்டானே என்னும்படி இருந்தது, அந்தக் காட்சி!

இந்தள குமாரன் குன்றையெல்லாம் தட்டிக் களைத்துப்போய், உளியும் சுத்தியலும் கையிலிருந்து சோர, பாறையிலேயே படுத்துவிட்டான்! அப்பொழுது, அவனுடைய செவிகளில் மீண்டும் அந்த இசை கேட்டது. எங்கிருந்தோ வரும் ஒரு தேவ கானம்! யாழின் ஏக்கம்! நரம்புகளின் துடிப்பு! பாதச் சலங்கையின் ஒலி!

இது என்ன, திடீரென்று வானத்திலிருந்து குதித்து வந்தவர்கள் போல, இந்தள குமாரனுக்கு எதிரே ஏழு இளங் கன்னியர்கள்! அவர்கள் குதித்த வரிசையில் 'ச ரி க ம ப த நி' என்று ஏழு ஸ்வரங்கள் ஒலித்தன. அந்த ஸ்வரம் ஒவ்வொன்றும் அவர்களுடைய பாதச் சிலம்பிலிருந்தும் கை வளையல்களிலிருந்தும் வந்தது. அவன் அப்படியே மெய்ம் மறந்தான்.

"இந்தள குமாரரே, என்ன திகைத்துவிட்டீர்?" என்று கேட்டாள் முதலிலே குதித்த மங்கை! அவளுடைய சாயல் மயில்போல் இருந்தது! கூந்தலில் மௌவல் மலரின் மணம் 'கம்' என்று வந்தது. பால் மொழி என்பார்களே, அப்படி யிருந்தது அவளுடைய பேச்சு!

குமாரன் அவளுடைய அழகிலே சொக்கிப் போனான். ஒன்றும் பேச வரவில்லை அவனுக்கு.

"என்னை யாரென்று திகைக்கிறீரோ? என் பெயர் குரல். 'ஸா' என்று செல்லமாகக் கூப்பிடுவார்கள். இதோ என் அருகில் முல்லை மலர் சூடி நிற்கிறாளே, அவள்தான் 'ரி'- பெயர் துத்தம்! பேசினால் தேனைக இருக்கும்."

இந்தள குமாரன் மெய்ம்மறந்து, பரவசமாகி அப்படியே மயங்கினான். மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், பொன்னைவிரை, புன்னை என்று ஏழு வகையான மலர்களைச் சூடி நின்ற அந்த ஏழு

கன்னியரும், ஏழு விதமான தோற்றத்தில் நின்ருலும அவர்களுக்குள் ஒரு ஒற்றுமை இருந்தது. இவர்களில் யார் அதிக அழகி என்று சொல்ல முடியாதபடி, எழுவருமே ஒருசேர மனத்தை மயக்கிஞர்கள். குமாரனுடைய புத்தி பேதலித்தது! அது கண்டு 'கலகல' என்று ஒரு ஒலிக்கோவை! 'ச ரி க ம ப த நி' என்று ஒரு ஆரோகணம். அடுத்த விஞடி எழுவரும் இந்தள குமாரனைச் சுற்றி வட்டமாக ஆரோகணத்து நடனமாட ஆரம்பித்து விட்டார்கள்!

ஆகா! என்ன அனுபவம் அது! அழகின் சுழலில், இன்னிசையின் சுழற்சியில், வாலிபத்தின் வனப்பில், இந்தள குமாரன் தன்னை மறந்து கிறங்கிஞன்! தேவமாதர் நடனமாடும் சூழலில், இந்திரன் இன்பமாக வீற்றிருக்கிருன் என்றும், கோபியர்கள் வட்டத்தில் கிருஷ்ணன் ஆனந்த லாகிரியில் ஆழ்ந்திருக்கிருன் என்றும் சொல்கிருர்களே, அப்படியிருந்தது இந்தள குமாரனுக்கு! அழகும், இளமையும் இசையுமாகச் சேர்ந்து வழங்கிய அந்த இங்கித அழைப்பிலே சொக்கிப் போய் அவர்களோடு கைகோத்து ஆடலாம் என்று எழுந்தான் அவன்! அவனுடைய உள்ளத்தின் ஆழத்தில் இருந்து பொங்கிவந்த இசையை வெளியிட என்று, உதடுகள் துடிதுடித்தன!

ஆஞல் இதென்ன? வானத்தில்இருந்து இரண்டு கைகள் படர்ந்து வந்தன. ஒரு கை அவனை அமர்த்தியது. மற்ருெரு கை உளியையும் சுத்தியலையும் நீட்டியது. தகப்பஞரின் கைகளா அவை? திமிறிக் கொண்டு எழுந்தான். ஆஞல் பாடுவதற்கு உதடுகள் துடித்தனவே, தவிர வார்த்தை வரவில்லை. மங்கையரை நோக்கி எழுந்தானே தவிர, கைகளை நீட்ட முடியவில்லை. இது கண்டு, ஏழு கன்னியரும் ஏக காலத்தில் 'கலகல' என்று சிரித்தார்கள். 'ச நி த ப

மகரி' என்று அந்தச்சிரிப்பொலி அவரோகணித்தது. மறு விநாடி, ஏழு பெண்களும் துள்ளிக் குதித்து ஓடிவிட்டார்கள்!

இந்தள குமாரன் பதறி விழித்தபோது, பாறையின் மேலே நிலவு பூரண நகை புரிந்துகொண்டிருந்தது. அருகிலே சுனையின் தண்ணீர் 'கலகல' என்று சிரித்துக்கொண்டு ஓடியது. மரங்களிலே காற்று வேடிக்கையாகக் கைகொட்டி 'ஓ' என்று சிரித்தது. ஆனால் இவை யொன்றும் அவன் செவியில் கேட்கவில்லை. ஏழு கன்னியர்களும், தங்கள் பாதச்சிலம்பின் ஒலியையும் மீறிச் சிரித்தார்களே, அந்த ஸ்வரக் கோவை, கனவு உலகின் கோடியில் இருந்து, நினைவுக் காற்றிலே இழைந்து வந்துகொண்டிருந்தது! ஆத்திரமாக எழுந்தான். உளியையும் சுத்தியலையும் எடுத்துப் பாறையிலே தட்டினான். என்ன ஆச்சரியம்! சற்று முன்பு அவனைச் சுற்றி ஏழு கன்னியர்கள் நின்று நடனமாடிய இடத்தில், இப்பொழுது புதிதாகஒரு இசையொலி கேட்டது. அது சிலம்பின் ஒலியா? கை வளையல்களின் ஒலியா? இல்லை! பாறையிலே ஏழு ஸ்வரங்கள் ஒலித்தன! கல்லிலே கானம் பிறந்தது!

அவ்வளவுதான்: விறுவிறு என்று உளியைத் தட்டினான். பாறைகளை யெல்லாம் செதுக்கித் தள்ளினான்! கனவிலிருந்து சிரித்துக்கொண்டு ஓடிய இசைக் கன்னியர்களைக் கல்லிலே பிடித்து நிறுத்தி விட்டான் இந்தளகுமாரன்!

## 6

நினைவின் ஒலி—அலைகளிலே மிதந்து சென்றுகொண்டிருந்த என் எண்ணங்களைக் கலைத்தது, ஆயிரக்கால் மண்டபத்து இசைத்தூண்களின் ஒலி. ஜலதரங்கம் போன்று வந்த அந்த இன்னிசையில்

ஈடுபட்டு உள்ளே சென்று பார்த்தேன். என்னுடைய சங்கீத நண்பர் மண்டபத்தின் தூண் ஒன்றிலிருந்த ரதியின் சிலையை, சிறு சுத்தியல் கொண்டு மெதுவாகத் தட்டி, ஸ்வரக் கோவைகளை இசைத்துக் கொண்டிருந்தார்! என்னைக் கண்டதும் தட்டுவதை நிறுத்திவிட்டு, "இந்த அதிசயத்தைப் பாருங்கள்!" என்று சொல்லி அப்படியே இன்னொரு கற்சிலையாக நின்றார்.

உண்மையில், ஆனந்த வியப்பிலே சொக்கிய எங்கள் கண்ணுக்கு முன்னால் நின்றது, ரதியின் சிலையா? இல்லை! 'கேளாத கானம்' என்ற பாடலுக்குப்பொருளாகக் கல்லுக்குள்ளே காட்சி தந்தது இசை!

# மூன்று கனவுகள்

ராஜகோபாலன் போர்வையை இழுத்து மூடிக்கொண்டு படுத்தான்; உறக்கம் வரவில்லை. போர்வையைத் தூர எறிந்துவிட்டுச் சாய்ந்து படுத்தான். அப்படியும் உறக்கம் வரவில்லை!

எப்படியும் நாளைக் காலை அப்பாவிடம் தன்னுடைய முடிவைச் சொல்லியாகவேண்டுமே!

**சுந்தரி** நல்ல அழகி. அவளுக்கு நிகரான அழகும் கலகலத்த பேச்சும் கலாசாலையிலேயே வேறு யாருக்கும் கிடையாது. அவளையே கல்யாணம் செய்துகொண்டால் என்ன? அந்த அழகும் கலகலப்பும் தன்னுடைய வாழ்க்கைக்கு அணி தருமே!

**வாணிக்கு** நல்ல சாரீரம். வீணையை மீட்டிக்கொண்டு பாட ஆரம்பித்துவிட்டால், யாரோ தேவலோகத்து அப்ஸரஸ் பூமிக்கு வந்து இந்த ராஜகோபாலனுக்கு என்றே கீதமிசைப்பது போல இருக்கும்! தனது வாழ்க்கை அந்த வீணையின் சுருதியிலே சேர்ந்துகொண்டால் என்ன?

**ராஜலக்ஷ்மியோ** பெரிய பணக்காரி. நேரத்துக்கு ஒரு உடை. நிமிஷத்துக்கு ஒரு மினுக்கு. வினாடிக்கு ஒரு பகட்டு! கலாசாலைக்கு வருகிற கார் ஒன்று. மத்தியான டிபனுக்குப் போகிற கார் இன்னொன்று. மாலையில் அவளை வீட்டுக்கு அழைத்துப் போகிற காரோ மற்றொன்று! ராஜகோபாலன் தன்னுடைய வாழ்க்கையை அந்த உல்லாஸமான காரிலேயே பவனி செலுத்தினால் என்ன?

விழியை மூடிக்கொண்டே வெகுநேரம் யோசனை களைச் சுழற்றிவிட்டான் ராஜகோபாலன்.

## 2

சுந்தரி ராஜகோபாலன் கையைப் பிடித்த முகூர்த்தம் சுந்தர முகூர்த்தம்தான் போலும்! அவனுடைய வாழ்க்கையில் ஓர் அழகு ஏற்பட்டது.

பந்துக்கள் எல்லாரும் சுந்தரியின் அழகையும் சாமர்த்தியத்தையும் பிரமாதமாக வியந்தார்கள். அவனுடைய நண்பர்கள் அனைவரும் அவன் யோகத்தை ஒரே "உயர்வு நவிற்சி"யில் பாராட்டினார்கள். அப்பொழுதெல்லாம் ராஜகோபாலனுடைய உயரமே ஒரு சாண் அதிகரிக்கும்.

ஆறு மாதம் ஆனந்தமாகக் கழிந்துவிட்டது.

உலகம் விசித்திரமானது என்கிறார்கள். மனிதரின் மனம் அதைவிட விசித்திரமாகத்தான் இருக்கிறது. தனக்கு எந்தப் பொருளிடத்தில் பற்று அதிகரிக்கிறதோ அந்தப் பொருளிடத்தில்தான், ஓர் ஏகபோக உரிமை கொள்கிறது மனம். இந்த உணர்ச்சி அதிகமாக அதிகமாக, மற்றவரால் இந்தத் தனி உரிமைக்குப் பாதகம் வந்துவிடுமோ என்ற கவலையும் அதிகரிக்கிறது.

ஆமாம்: ராஜகோபாலனுடைய வாழ்க்கையில் மாறுதல் உண்டாகத் தலைப்பட்டது!

நண்பர்கள் பலர் வீட்டுக்கு வருவார்கள். அவர்கள் ஒவ்வொருவருடனும் சுந்தரி எப்படிப் பேசுகிறாள், அவர்கள் என்ன பதில் சொல்கிறார்கள் என்பதில் எல்லாம் ராஜகோபாலன் கவனம் செலுத்தினான். சந்தேகம் என்ற நோய் அவனைப் பிடித்தது!

சுந்தரி அழகி; அபாரமான அழகி. அந்த ஊரிலேயே அவளுக்கு இணையான அழகி இல்லை. ராஜ

கோபாலனுக்கு நன்கு தெரியும். ஆனால் இன்பம் தரு வதற்குப் பதிலாக அந்த அழகு கொடிய துன்பத் தைத் தந்தது.

ஒரு நாள் மாலை. ஆபீஸிலிருந்து வர நேரம் ஆயிற்று. ராஜகோபாலன் வீட்டுக்கு வந்தபோது இரவு எட்டு மணி. மாடியிலே விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ஜன்னலுக்கு அருகே சற்று நேரம் நின்று யார் பேசுகிறார்கள் என்று உற்றுக் கேட் டான். சுந்தரேசன் குரல் கேட்டது. சுந்தரேசன் மிகவும் நல்ல சிநேகிதன். ஆனால் இன்றைக்கு என்னவோ ராஜகோபாலனுக்குச் சுந்தரேசனைப் பற்றிய பழைய அபிப்பிராயம் மாறியது!

ராஜகோபாலன் வாழ்க்கையில் அன்றிலிருந்து புயல் வீச ஆரம்பித்தது. சுந்தரிக்கும் அவனுக்கும் அடிக்கடி மனஸ்தாபம் ஏற்பட்டது. ஒருநாள் சாப் பிடாமல்கூட ஆபீஸுக்குப் போனான் அவன்!

"இந்தாருங்கள், சுந்தரேசன் சென்னைக்குப் போயிருந்தாராம். உங்களுக்குப் பிடிக்குமே என்று இந்த 'டேபிள் லாம்'பை வாங்கி வந்தார்!" என்று ஒரு நாள் அன்போடு கொடுத்தாள் சுந்தரி.

ராஜகோபாலனுக்குக் கோபம் வந்தது. "சுந்த ரேசன் இனிமேல் இந்த வீட்டில் அடியெடுத்து வைத்தால் என்ன செய்வேனோ, தெரியாது. சொல்லிவிட்டேன். ஆமாம்...!!"

சுந்தரிக்கு அந்தவார்த்தைகள் அக்கினித்திராவ கத்தை இதயத்திலே கொட்டுவதுபோல் விழுந்தன.

"நீங்கள் சொல்வதொன்றும் எனக்குப் புரிய வில்லையே! இப்போது கொஞ்ச நாளாகவே நீங்கள் ஒரு மாதிரியாக......."

ராஜகோபாலனுக்கு ஆத்திரம் பொங்கிவந்தது. அப்படியே பாய்ந்துபோய் அந்த 'டேபிள் லாம்'பை

எடுத்தான். ஒரு ஓங்கு ஓங்கித் தரையிலே வீசினன். "தடா....ல்!" என்று விளக்கு சுக்கு நூருகச் சிதறியது.

ராஜகோபாலன் கண்ணை விழித்தான். சுற்று முற்றும் பார்த்தான். யாரும் இல்லை. கண்களைத் துடைத்துக்கொண்டு மறுபடியும் தூங்க முயற்சித் தான்.

3

வாணியும் அவளுடைய வீணையும் ராஜ கோபாலனுடைய வீட்டில் நுழைந்த நேரம் "ஸுஸ்வர" மான நேரமாகத்தான் இருக்க வேண் டும்: வீட்டில் எப்பொழுதும் இன்பநாதம். வீணையும் குரலும் இசைந்து அவனுடைய வாழ்க்கை-நாடகத் திற்கு இனிய பின்னணி இசையாக ஒலித்தன!

ஆறு மாதம் ஆனந்தமாகக் கழிந்துவிட்டது.

உலகம் விசித்திரமானது என்கிருர்கள். மனித ரின் மனம் அதைவிட விசித்திரமாகத்தான் இருக் கிறது. ராஜகோபாலன் எண்ணினன்:

'வீணை நல்ல வாத்தியம். வாணிக்கு நல்ல குரல். ஆனலும் ஒரு ஓய்வு ஒழிவு வேண்டாமா! அளவுக்கு மீறினல் அமுதமும் நஞ்சு என்பார்கள். சங்கீதம் ஒரு அமுதந்தானே?'

ராஜகோபாலனுடைய வாழ்க்கையில் மாறுதல் உண்டாக ஆரம்பித்தது.

நண்பர்கள் வருவார்கள். அவர்களோடு நாலு வார்த்தை சேர்ந்தாற்போல் பேசவிடமாட்டாள் வாணி.

"அப்பப்பா! பேச்சு, பேச்சு! என்ன பேச்சு! அவர்களுக்கெல்லாம் வேலை இல்லையென்ருல் உங் களையும் வந்து ஏன் தொல்லைப் படுத்துகிருர்கள்?... இன்றைக்கு பேகடா ராகத்தில் ஒரு புதிய உருப்படி படித்திருக்கிறேன். கேட்கிறீர்களா?"

ஐயோ, ஐயோ! நித்தம் ஒரு புதிய பாட்டு; ஒரு புதிய 'ஸங்கதி', அல்லது ஒரு புதிய 'பிடி'!

"இந்தாருங்களேன், என்னவோ எழுதிக் கொண்டிருக்கிறீர்களே! எழுத்து, எழுத்து! என்ன எழுத்து! ஆபீஸிலே போய் எழுதுவது போதாதா!....இன்றைக்கு நான் குந்தல வராளியில் ஒரு புதிய கல்பனை செய்தேன். கேட்கிறீர்களா?"

ராகம், கல்பனை, ஸங்கதி, உருப்படி, பிடி-இந்த வார்த்தைகளைக் கேட்டாலே ராஜகோபாலனுக்கு நரம்புகள் துடித்தன!

ஒரு நாள் - ஞாயிற்றுக்கிழமை யன்று - ஆபீஸ் கட்டுகள் அத்தனையும் எடுத்துக்கொண்டு வீட்டுக்கு வந்திருந்தான். அந்தப் பாழாய்ப்போன வருஷ-முடிவுக் கணக்கு, கழுத்தை அறுத்துக்கொண்டிருந்தது. ஒவ்வொரு தரம் கூட்டும்போதும் ஓரொரு தொகை வந்தது. என்ன செய்வான், பாவம்! இருப்புப் பணம் நூற்றுக் கணக்கில் வித்தியாசப்பட்டால் எப்படி இருக்கும் அவனுக்கு!

"இந்தாருங்களேன், எழுத்து! எழுத்து! எழுத்து! என்ன எழுத்தோ! தினந் தினம் எழுதுவது போதாதா! ஞாயிற்றுக்கிழமையிலும் எழுத்தா?........இன்றைக்கு, கமனச்ரமத்தில் ஒரு புதிய பாட்டு பார்த்திருக்கிறேன்.கேட்கிறீர்களா?"

ராஜகோபாலனுக்கு வந்த எரிச்சலைத் தாங்கி வரப் பாஷைக்குச் சக்தி இல்லை. ஆவேசமாக மாடிப் படிகளில் இறங்கினான். ஓடியே போய் அந்த ஜமக்காளத்தின்மேல் இருந்த வீணையை எடுத்தான். தலைக்கு மேலே ஓங்கினான்.

"தடா........ல்!"

ராஜகோபாலன் கண்ணை விழித்தான். சுற்று முற்றும் பார்த்தான்.யாருமில்லை. கண்களை நன்றாய்த்

துடைத்துக் கொண்டு மறுபடியும் உறங்க முயற்சித்தான்.

## 4

ராஜலக்ஷ்மி வீட்டுக்கு வந்த முகூர்த்தம் லக்ஷ்மி முகூர்த்தமாகத்தான் இருக்க வேண்டும். வாழ்க்கையில் ராஜகோபாலனுக்குத் திருமகள் கடாக்ஷம் பரிபூரணமாக உண்டாயிற்று.

மாதம் தவறினாலும் ராஜலக்ஷ்மிக்கு அவளுடைய அப்பாவிடமிருந்து 'செக்' வரத் தவறுவதில்லை. நேரத்துக்கு ஒரு புடவை, நிமிஷத்துக்கு ஒரு மினுக்கு, வினாடிக்கு ஒரு பகட்டு, விருந்துகள், சினிமாக்கள், நாடகங்கள், உல்லாசப் பிரயாணங்கள் - எங்கே சென்றாலும் 'ரோல்ஸ் ராய்ஸ்' கார்தான்!

ஆறு மாதம் பிரும்மானந்தமாய்க் கழிந்து விட்டது.

உலகமும் மனித மனமும் விசித்திரமானவை என்று நமக்குத் தெரியும். ராஜகோபாலன் வாழ்க்கையில் மாறுதல் ஏற்பட ஆரம்பித்தது.

தீபாவளிக்கு முந்நூறு ரூபாய்க்குப் புடவை எடுத்தாள் ராஜலக்ஷ்மி. இவனாவது நாலு முழத்தில் ஒரு வேட்டி உபாயமாக எடுத்துக் கொள்ளக் கூடாதா? முந்நூறு ரூபாய்ப் புடவைக்கும் மூன்று ரூபாய் வேட்டிக்கும் எப்படிப் பொருந்தும்? நல்ல அகலமான கரைபோட்ட ஜரிகை வேட்டியாகவே எடுத்து ராஜகோபாலனிடம் கொடுத்தாள் ராஜலக்ஷ்மி.

ராஜகோபாலன் தன் மனைவியின் செலவைக் கட்டுப்படுத்த முயற்சித்தான். தன்னுடைய மாதச் சம்பளம் நூறு ரூபாயும், அவளுடைய ஒரு நாள்

"ஷாப்பிங்" குக்கே போதாது என்பதை வற்புறுத்திக் கூற எண்ணினான். ஆனால் அவளுக்கு இதெல்லாம் புரிந்தால்தானே? மாதம் தவறினாலும் அவளுடைய அப்பாதான் 'செக்' அனுப்பத் தவற மாட்டாரே!

அன்று ராஜகோபாலன் கடுமையான் ஜோலிக்குப் பிறகு ஆபீஸிலிருந்து சோர்வுடன் வீடு திரும்பினான். இங்கு வந்தால் வீடு ஒரே தீப வர்ணலங்காரமாகக் காட்சி தந்தது. ராஜலக்ஷ்மி 'கிளப்'பிலுள்ள தனது சிநேகிதிகள் அத்தனை பேருக்கும் ஒரு நிலா விருந்து ஏற்பாடு செய்திருந்தாள்.

"எனக்கு உடம்பு சரியாயில்லை. நான் போய்ப் படுத்துக் கொள்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே மாடிக்குப் போய்விட்டான் ராஜகோபாலன்.

இரவு ராஜலக்ஷ்மி விருந்து முடிந்து மாடிக்கு வர இரண்டு மணி ஆகிவிட்டது. வந்து பார்த்தால், ராஜகோபாலன் ஆபீஸ் - கட்டுகளைப் புரட்டிக் கொண்டிருந்தான்.

"என்ன இது! உடம்பு சரியாயில்லை என்று சொன்னீர்களே....?"

"ஆமாம். உடம்பு எப்படிச் சரியாக இருக்கும்! நூறு ரூபாய்ச் சம்பளத்திற்கு நான் இப்படி இரவும் பகலும் உழைக்கிறேன். நீ என்னடா என்றால்..."

ராஜலக்ஷ்மிக்கு இந்த வார்த்தைகளைக் கேட்க மிகவும் கஷ்டமாயிருந்தது.

"பணம் பணம் என்று ஏன் கவலைப்படுகிறீர்கள்? இன்று காலைத் தபாலில் அப்பாவிடமிருந்து........"

அதற்குமேல் ராஜகோபாலன் அவளைப் பேச விடவில்லை. நாற்காலியிலிருந்து எழுந்தான். மேஜையிலே கிடந்த அந்த அப்பாவின் கடிதத்தை எடுத்தான்! அதிலிருந்த 'செக்'கை உலைத்தான்.

"இந்தா, நீயும், உன் அப்பாவும், அவ்ருடைய செக்கும்!" என்று சொல்லிக்கொண்டே அந்தச் 'செக்'கைத் துண்டு துண்டாகக் கிழித்து அவளுடைய முகத்திலே எறிந்துவிட்டுச் சாய்வு நாற்காலியில் 'தடால்' என்று ஒரு உதை கொடுத்தான்!

## 5

'கலகல' என்று சத்தம் கேட்டது. ராஜகோபாலன் கண் விழித்தபோது அவனுடைய அப்பா அருகிலே நின்று சிரித்துக்கொண்டிருந்தார்.

"என்னடா, இரவு யோசனை ரொம்ப பலம் போலிருக்கிறது! மணி எட்டாகிறது. இன்னும் தூங்கிக்கொண்டிருக்கிருயே!"

ராஜகோபாலன் கண்களைத் துடைத்துக் கொண்டே எழுந்தான்.

"என்ன முடிவு செய்திருக்கிருய்? சுந்தரியா, வாணியா, ராஜலக்ஷ்மியா—மூன்று பேரில் என் மருமகள் யார்?"

"மூன்று பேருமே இல்லை!"

"என்னடா, புதிர் போடுகிருய்!"

"மாமா மகளைத்தான் நான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன், அப்பா!"

ராஜகோபாலன் தந்தை, தம்முடைய மகன் சொன்ன இந்தத் தீர்ப்பைக் கேட்டுத் திடுக்கிட்டார்.

"உன் இஷ்டம் போலவேதான் உனது கல்யாணம் என்று ஏற்கனவே நான் சொல்லி விட்டேனே! இப்போது திடீரென்று இந்தத் தீர்மானத்துக்கு வர என்னடா காரணம்?"

ராஜகோபாலன் தன் அப்பாவிடம் சொன்ன காரணங்கள் மூன்று. முதலாவது, அவனுடைய மாமா மகள் ஒரு 'ஒப்பற்ற அழகி' இல்லை. இரண்டாவது, அவளுக்கும் வீணைக்கும் எப்பொழுதுமே ஒத்து வந்ததில்லை. கடைசியாக, மூன்றாவதும் மிக மிக முக்கியமானதுமான காரணம், அவளுடைய அப்பாவுக்கு எந்தப் பாங்கிலும் 'அக்கௌண்ட்' கிடையாது!

# ஷாஹ்னாமா

"மைமந்தி என்னுடைய லக்ஷியம் நிறைவேறி விட்டதை இன்று இந்த சபையிலே அறிவிக்கச் சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது" என்றான் பாரசீக வேந்தன் முஹம்மது ஸபுக்தெஜீன். அவனுடைய வார்த்தைகளில் மட்டற்ற மகிழ்ச்சி ஒலித்தது.

"நீண்ட நாட்களாக, நமது பாரசீக மன்னரின் வரலாற்றைக் காவியமாகப் பாட ஒரு கவிஞரைத் தேடி வருகிறேன் அல்லவா? கண்டு பிடித்துவிட்டேன், ஒரு மகாகவியை!"

இடுப்பில் செருகியிருந்த பொக்கிஷச் சாவியைத் தொட்டுப் பார்த்துக்கொண்டே எழுந்திருந்தான். காஜா ஹசன் மைமந்தி. அவன்தான் பாரசீக அரசின் கஜானா அதிகாரி.

"சர்க்கார், தங்களுடைய ஆக்ஞைக்குக் காத்திருக்கிறேன்."

"அபுல் காசிம் மன்சூர் அந்தப் பணியை ஏற்றுக் கொண்டிருக்கிறான். அவன் பாடுகிற ஒவ்வொரு கவிக்கும், ஒரு பொன் பரிசளிப்பாயாக!"

அன்று சபை கலைந்ததும் மைமந்தி தனது ஜாகைக்குப் போகவில்லை. நேரே அபுல் காசிம் மன்சூரின் வீட்டிற்குத்தான் போனான்.

அபுல் காசிம் மன்சூர், டூஸ் பட்டணத்தில் ஒரு சிறந்த அறிவாளி என்பது மைமந்திக்குத் தெரியும். பெர்தௌசி என்ற புனைபெயரில் மன்சூர் அநேகப் பாடல்கள் பாடியிருப்பதையும் அவன் அறிவான்.

"மன்சூர், அல்லாவின் ஆசீர்வாதம் உங்களுக்குப் பரிபூரணமாக யிருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே பெர்தௌசியின் வீட்டில் நுழைந்தான் மைமந்தி.

"சலாம், உள்ளே வாருங்கள் ஹஸ்ரத்!" என்று அன்போடு வரவேற்ருன், பெர்தௌசி.

"நீங்கள் பாடும் ஒவ்வொரு கவிக்கும் ஒரு பொன் பரிசு கொடுக்கும்படி, எனக்குச் சுல்தான் கட்டளை!"

"சுல்தான் ஒரு பரம ரசிகன். அவன் ஆசியிருந்தால், எனக்கு இன்னும் எவ்வளவோ நலன்கள் ஏற்படும். ஆனுலும் நாணயங்கள் எனக்கு எதற்கு?" —பெர்தௌசியின் குரலில் உண்மை தொனித்தது.

"சுல்தானுடைய நன்கொடையை மறுப்பது உசிதமில்லை."

"அப்படியானுல்,கவிக்கு ஒன்று வீதம் சேருகிற நாணயங்கள் அத்தனையும் சேமித்து வையுங்கள். மொத்தமாக வாங்கிக்கொள்ளுகிறேன். என்னுடைய டூஸ் பட்டணத்து உழவர்கள் மகசூல் காணவில்லை என்று தவிக்கிருர்கள். நமது தொழிலாளர்கள் உணவு போதவில்லை என்று கலங்குகிருர்கள். அவர்கள் துயரத்தைப் போக்க, டூஸ் பட்டணத்து லார் நதியில் ஒரு அணை கட்டவேண்டும். அந்தப் பணிக்கு இந்தப் பரிசுப் பொன்னை உபயோகிக்கிறேன்.".

"நல்ல யோசனை மன்சூர், அல்லாஹ் பூர்த்தி செய்வான். நான் வருகிறேன்."

## 2

பெர்தௌசியின் மகா காவியம் பூர்த்தியாவதற்கு முப்பத்தைந்து வருஷங்கள் பிடித்தன. அறுபதினுயிரம் கவிகள் கொண்ட அந்த அழகிய காவியத்தை **'ஷாஃனமா—வேந்தரின் வரலாறு'** என்று

மகுடம் சூட்டி, அயாஸ் என்னும் தர்பார் உத்தியோகஸ்தனிடம் கொடுத்தனுப்பினன் பெர்தௌசி. அதைப் பார்த்த எல்லோரும் வியந்தார்கள். சொல் நயம் தெரிந்தோர் மனத்தைப் பறிகொடுத்தார்கள். சுல்தான் மெய்ம்மறந்துவிட்டான்.

"மைமந்தி, மாபெரும் யானை ஒன்று கொண்டு வா; அது தாங்கு மட்டும் பொன் சுமை ஏற்றி பெர்தௌசிக்கு உடனே கொண்டு போ!" என்று ஒரே எக்களிப்போடு சுல்தான் கூறினன்.

ஒரு யானைச் சுமை; அவ்வளவும் பொன் நாணயம்! கஜானு அதிகாரி காலைத் தேய்த்தான்!

"மைமந்தி, என்ன யோசிக்கிருய்?"

"இல்லை சர்க்கார்—பெர்தௌசி ஒரு மகான். அவருக்குத் தங்க நாணயமும் மண் ஓடும் ஒன்றுதான்! அவருக்குப் பிரயோஜனமில்லாத இந்தத் தங்க நாணயங்களை நாம் வேறு பிரயோஜனமான வழிகளில் உபயோகப்படுத்தலாமே என்றுதான் யோசிக்கிறேன்......"

"அப்படியானல்...........?"

"அறுபதினுயிரம் பாடல்களுக்கும், அறுபதினுயிரம் பொன்னுக்குப் பதிலாக அறுபதினுயிரம் வெள்ளிக் காசுகள் அனுப்பினல் போதும் என்று நினைக்கிறேன். எப்படியும் நமது அன்பிற்கு ஒரு அறிகுறிதானே?"

சுல்தான் அந்த யோசனையை ஆமோதித்தான். உடனே, அயாஸ் கிளம்பினன், அறுபதினுயிரம் வெள்ளியோடு.

## 3

"அறுபதினுயிரம் வெள்ளி!... அயாஸ், உங்கள் சுல்தான் விளையாடுகிருரு? யாருடன் விளையாடுகிருன் தெரியுமா? தெரியுமா உங்கள் சுல்தானுக்கு......?"

பெர்தௌசியின் கண்கள் இரத்தம்போல் சிவந்துவிட்டன. பல்லை நெறுநெறு என்று கடித்தான். மறுகணம் ஒரு மகாகவியின் ஆவேசத்தோடு எழுந்தான் அவன்.

"இந்தா பிடி, இருபதினாயிரம்! நீ, சொன்னதைச் சொன்னபடி செய்யும் வேலையாள்—உன்னை மெச்சுகிறேன்!"

பெர்தௌசி அந்த அறுபதினாயிரம் வெள்ளிக் காசுகளைத் தன் கையால்கூடத் தொடவில்லை. இருபதினாயிரத்தை அயாஸிற்குக் கொடுத்தான். இன்னும் இருபதினாயிரத்தை டூஸ் பட்டணத்தில் அதிரம்யமான 'ஹமாம்' (ஸ்நான அறை) வைத்திருந்த தனது 'தோஸ்த்' ஒருவனுக்கு வெகுமதி கொடுத்தான்!

மற்ற இருபதினாயிரம் வெள்ளியையும் ரஹீமிற்குக் கொடுத்தான்; மது அங்காடி ரஹீமிற்கு!

"ரஹீம், நீதான் என்னுடைய ஆத்மாவை உணர்ந்த நல்ல ரசிகன்! அன்று நீ கொடுத்த பௌக்கா இருக்கிறதே, அரே அல்லாஹ்! அதை நினைத்த மாத்திரத்திலே போதை 'கிர்' என்று தலைக்கு ஏறுகிறது. பிடி உனக்கு இருபதினாயிரம் வெள்ளி—உனக்கே உனக்கு!"

பெர்தௌசியினுடைய வேகத்தை ஆற்ற முடியாமல் வெகுநேரம் திணறினான் அயாஸ்.

வீட்டிற்குள்ளே போன பெர்தௌசி கொஞ்ச நேரத்தில் முத்திரையிட்ட ஒரு கடிதத்தை அயாஸின் கையில் கொடுத்தான்.

"இருபது நாள் கழித்து சௌகரியமான நேரத்தில் இதை உங்கள் சுல்தானிடம் கொடு!"

அடுத்த நிமிஷம் பெர்தௌசி அங்கிருந்து மறைந்தான்!

## 4

உலக மகா இலக்கியங்கள் எதிலும் கண்டிராத ஆவேசம் அந்த முத்திரைக்குள் அடங்கியிருந்தது. மனித இதயங்களின் வெறுப்பை எல்லாம் ஒன்று திரட்டிக் கவிதையாகச் சமைத்து வைத்திருந்தான் பெர்தௌசி, அந்தப் பாடல்களிலே.

சுல்தான் பிரித்துப் பார்த்தான் :—

மகம்மதுன் தந்தையும் ஓர்
 மன்னனாய்ப் பிறந் திருப்பின்
மகுடமே சூட்டி என்றன்
 மகிமையைத் துதித் திருப்பாய்!
மகம்மதுன் அன்னை யென்பாள்
 மாண்புடைக் குலத்தள் என்னின்
மாபெருஞ் செல்வங் கொண்டு
 மகிழ்வொடு குவித்திருப்பாய்!

அந்த ஒரு செய்யுளைப் படித்ததுமே சுல்தானுடைய முகம் சிறுத்துவிட்டது. அடுத்த பாடலைப் படிக்க மனம் ஒப்பவில்லை.

"அயாஸ்.........!"

அந்த அழைப்பிலே பூவுலகம் எல்லாம் நடுங்கியது!

அயாஸ், பாவம், நிரபராதி! அந்த முத்திரைக்குள் என்ன இருந்தது என்று மட்டும் தெரிந்திருந்தால், இதைக் கொண்டுவந்திருக்கவே மாட்டான்!

"பெர்தௌசியைப் பிடித்துக்கொண்டு வருபவருக்கு அறுபதினாயிரம் பொன் வெகுமதி!" என்றான் சுல்தான்.

மறுகணம் நகர முரசு அந்த ஆக்ஞையை எதிரொலி செய்தது!

5

ஊரை விட்டு ஊர்; நகரத்தை விட்டு நகரம்; தேசத்தை விட்டுத் தேசம்-அலைந்தான் பெர்தௌசி.

டார்ஜன் இளவரசன் காபூஸிடம் சென்று வாழ்ந்தான். ஆரம்பத்தில் அவன் பெர்தௌசியை அன்போடு ஆதரித்தான். பிறகு அவனுக்குங்கூட சுல்தானின் விரோதத்தைச் சம்பாதித்துக்கொள்ள விருப்பமில்லை. பெர்தௌசிக்கு வேண்டிய பணம் கொடுத்து வழி யனுப்பிவிட்டான்.

பெர்தௌசி பக்தாத் சென்றான், காலிப்பிடம். அங்கு 'திருக் குர்ஆனி'லிருந்து பிரசித்தி பெற்ற யூஸப்—சுலேகா காதலை ஒன்பதினாயிரம் குறள்களில் பாடினான். பின்னர் அங்கும் இருப்புக் கொள்ள வில்லை.

அலைந்தான். உலக சிரேஷ்டர்களில் ஒருவன் என்று இன்று மாந்தர் துதிக்கும் மகாகவிஞன் காடு மலை யெல்லாம் கடந்து கால் வலிக்க நடந்தான்.

"அலைந்து, அலைந்து என்ன கண்டோம்" என்று நினைத்து ஊர் திரும்பிய பெர்தௌசி, திடீரென்று திகைத்து நின்றான். வீதியிலே தெருப் புழுதியில் அளைந்துகொண்டிருந்த ஒரு குழந்தை, என்ன ஆச்சரியம், அழுத்தந் திருத்தமாய்ப் பாடியது :

"மகம்மதுன் தந்தையுமோர்
மன்னனாய்ப் பிறந்திருப்பின்,
........................ ..."

பெர்தௌசி, அந்த இடத்தில் ஒரு விநாடி நின்றான். தான் இயற்றிய பாடலை ஒரு குழந்தை கூட அல்லவா பாடுகிறது!

"உலகம் என்னை உணர ஆரம்பித்துவிட்டது! இனி சுல்தானைப் பற்றி என்ன கவலை!"

'விறு விறு' என்று வழி நடந்தான். சுல்தானுடைய உதாசீனத்தை உலகம் வெறுக்கிறது. தன்னிடம் பூரண அனுதாபம் கொள்கிறது என்ற நினைவு அவன் இதயத்தை இன்ப ஆவேசப் புயலில் சுழற்றியது!

## 6

காலம் என்பது, எத்தகைய கோபத்தையும், எந்தத் துக்கத்தையும், எவ்விதக் கசப்பையும் குணப் படுத்தும் பரம ஔஷதம் என்று பெரியோர்கள் சொல்வதுண்டு.

சுல்தானுக்குப் பெர்தௌசியிடமிருந்த வெறுப்பும், கோபமும், காலப்போக்கிலே தணிந்தன. படிப்படியாக அவனுடைய பெருமையுங்கூடத் துலங்க ஆரம்பித்தது.

அந்தியின் மயக்க இருள், டூஸ் பட்டணத்திலே, சாய்ந்துகொண்டிருந்தது. வியாபகமான அந்தப் பட்டணத்தின் வடக்கு வாசல் வழியாக அயாஸ் ஒரு பார வண்டியிலே தங்க நாணயச் சுமைகளோடு சென்றான். இத்தனை நாளும் தேசாந்திரியாகத் திரிந்துகொண்டிருந்த பெர்தௌசி, இப்பொழுது டூஸ் பட்டணத்திற்குத் திரும்பிவிட்டான் என்ற செய்தியைக் கேட்டுவிட்டு சுல்தான் அந்த வெகுமதியை அனுப்பினான்.

கதவைத் தட்டினான் அயாஸ். யாரோ ஒரு கிழவன் வந்து திறந்தான். அயாஸ் அவனைக் கூர்ந்து பார்த்தான்: நிச்சயம், அது பெர்தௌசியில்லை.

"பெர்தௌசி இருக்கிறாரா?"

"நீங்கள் யார்?"

"சுல்தான் மகம்மது இபூசபூக்தஜீன் அனுப்பிய வேலைக்காரன்."

"விசேஷம்?"

"ஷாஃனமா என்னும் மகத்தான காவியம் புனைந்த கவிஞர் திலகத்திற்கு வெகுமதிகள் கொண்டுவந்தேன், சுல்தானிடமிருந்து!"

"உங்கள் சுல்தானுடைய ரசிகத்தன்மை சற்றுப் பிந்திவிட்டதே!"

"என்ன!"

"உலக மகா கவிஞர்கள் முடிவாகச் சென்ற இடத்திற்கு நமது மகா கவியும் சென்றுவிட்டார்!"

அயாஸ் அப்படியே மனமுடைந்து சாய்ந்து விட்டான். அவனுடைய துக்கத்தை இன்னொரு மகா கவிஞனால்தான் கூற முடியும்!

டூஸ் பட்டணத்தின் வடக்கு வாசலிலே சுல்தான் அனுப்பிய பார வண்டி தங்கச் சுமையுடன் நின்றது. தெற்கு வாசல் வழியாக அந்த உலக மகா கவி பெர்தௌசியின் உடல் சென்றது!

# கடலும் கரையும்

காவிரிப்பூம் பட்டினத்தின் விசாலமான கடற் கரையில், ஆனந்தமான நிலவு பொழிகிற அமுத வேளையில், ஒளி வீசுகிற வெள்ளி மணற் பரப்பில் சந்திர மித்திரனும் பாநுமதியும் சந்தித்தார்கள்- ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு. எதிர்ப்பாராத விதமாக!

இதற்கு முன்பு எத்தனையோ முறை அதே கடற் கரையில் அதே பூரண நிலவில் அவர்கள் இருவரும் சந்தித்ததுண்டு. ஆனால் அதெல்லாம் முன் கூட்டியே பேசி வைத்து, ஒருவரை ஒருவர் எதிர் பார்த்துச் சந்தித்தது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு அது! இப்பொழுதோ?

இப்பொழுது—இத்தனை நாட்களுக்குப் பின்பு— மீண்டும் இப்படி ஒரு சந்திப்பு ஏற்படும் என்பதைப் பாநுமதி எண்ணிக்கூடப் பார்க்கவில்லை. சந்திர மித்திரன்தான் எண்ணியதுண்டா? இல்லை.

நிலவின் ஒளி வெள்ளமும் கடலின் அலை வெள்ளமும் ஒன்றையொன்று அணைகிற இன்பப் பௌர்ணமி அது.

சந்திர மித்திரன் இந்த ஐம்பது ஆண்டுகளுக் கிடையில் சோழவள நாட்டின் எல்லை கண்ட இட மெல்லாம் எங்கெங்கோ சுற்றித் திரிந்து விட்டான். மனித குலத்தின் வாழ்வுப் போராட்டங்களை யெல் லாம் கண்டு கண்டு சலித்துப்போய், அதிலிருந்து உய்யும் வழியை உலக மாந்தருக்கு உபதேசிப்பதி லேயே இதுவரை தனது நாட்களைக் கழித்து விட் டான் அவன்! இன்றைக்கு அந்தச் சமணத் துறவி

சம்பாபதிக் கடற்கரையில் தன்னுடைய இளமையின் இன்ப நிகழ்ச்சிகளுக் கெல்லாம் நிலைக்களனுக இருந்த கடலின் கரையில் பௌர்ணமி நிலவில் ஒரு முறை நடந்து செல்லலாம் என்று நினைத்தே இந்தத் தள்ளாத வயதிலும் நெடுந்தூரத்திலிருந்து இரண்டு வாரமாக நடந்து நடந்து வந்திருக்கிருன். பாநு மதியோ எல்லை வாயிற் கோட்டத்தில் புத்த தேவ னுடைய பாத கமலங்களில் அர்ப்பணம் செய்து விட்ட தனது வாழ்வின் இந்த அந்தி வேளையில்—உடல் என்ற கூட்டிலிருந்து உயிர்ப் பறவை பறந்து செல்லச் சிறகடித்து நிற்கும் இந்த முதுமைப் பருவத் தில், பழைய சந்திப்புகளின் அரங்கமாக அமைந்த கடற்கரையில் ஒருமுறை பௌர்ணமி நிலவைப் பார்த்து விடுவோமே என்று கருதித்தான் தவச் சாலையிலிருந்து வெளியே வந்தாள். இந்தச் சந்திப்பை எதிர்பார்க்கவே யில்லை!

பாநுமதியின் கண்களில் மரணத்தின் ரேகை கீற்றுவிட ஆரம்பத்திருந்தது என்ருலும், உள்ளத் தில் துறவு வேரூன்றி இருந்த காரணத்தால் மரண பயமோ பதற்றமோ அந்த விழிகளில் காணப்பட வில்லை. ஆனுல் அதைப்பற்றிய நிச்சயம் இருந்தது. அவள் நினைத்தாள்: ''இந்தப் பௌர்ணமி கழிந்து விட்டால் இனி அடுத்த பௌர்ணமிக்கு இப் பூவுலகில் இருப்போம் என்பது என்ன உறுதி? மரணம் நம்மை ஆட்கொண்டு விட்டால் பிறகு காவிரிப்பூம் பட்டினத்தையும் இந்தக் கடற்கரை யையும் மறுபடி பார்ப்பது எங்கே? புத்த தேவனைச் சரண் புகுந்த அந்த விநாடியே 'பஞ்ச கந்தமும்' அகன்று பிறப்பு என்னும் வேதனையை வென்ருய் விட்டது. என்ருலும் அப்படியே ஒருவேளை மீண் டும் பிறக்க நேரிட்டாலும் இந்தக் காவிரிப்பூம்பட்டி னத்திலேதான் பிறப்போம் என்று என்ன நிச்சயம்? அப்படியேதான் பிறந்தாலும் அந்த இளமை நினைவு

கள் எல்லாம் மனத்தில் நிற்கவா செய்யும்? அடடா! மறக்க முடிகிற நினைவுகளா அவை!''

உலகப் பற்றை வேரோடு களைந்து எறிந்து விட்ட அந்தத் தூய உள்ளத்திலும்கூட, இந்த ஐம்பது ஆண்டுத் தவத்தின் இடையிலும் அந்த நினைவுகள் அலைஅலையாகப் பொங்குவதைஅவளால் தடுக்க முடியவில்லை. ஆனால் அவை வெள்ள மாகப் பெருகிக் கரையை உடைத்து வந்து துறவு நிலையை மூழ்கடிக்காமல் மட்டும் காப்பாற்ற முடிந் தது அவளால்!

சம்பாபதிக் கடலின் அலைகளைப் போலப் பொங்கிவந்து சரிந்து சரிந்து எல்லைக்கு உள்ளேயே மீண்டுவிடுகிற அந்த நினைவுகளை மிதித்துக் கொண்டு மேலே நடப்பவள் போல, அலைகள் தவழும் மணற் பரப்பிலே நடந்தாள் பானுமதி. அப்பொழுதுதான் சந்திர மித்திரன் எதிர்ப்பட்டான்!

''நீங்களா! ஆச்சரியமாக இருக்கிறதே!'' என்று திகைத்தாள் பானுமதி.

''நீ இங்கு வந்ததும் எனக்கு ஆச்சரியமாகத் தான் இருக்கிறது. இந்த நள்ளிரவில் தவச் சாலையி லிருந்து எப்படி வெளியே வந்தாய்?''

பானுமதி பதில் பேசவில்லை. திகைப்பிலிருந்து மீண்டுவர அவளுக்கு நேரம் ஆயிற்று.

''நீங்கள் என்னை எதிர்பார்த்தே இருக்கமாட் டீர்கள், இல்லையா?'' என்று பானுமதி கேட்டபோது மீண்டும் திகைப்பே ஒலித்தது வார்த்தைகளில்.

சந்திர மித்திரன் சொன்னான்: ''இல்லை. எதிர் பார்க்கவில்லை. ஆனால் மனசின் ஆழத்தில் எங்கோ ஒரு கோடியில் ஒரு சிறு எண்ணம், ஒரு விவரிக்க முடியாத ஆசை, 'இந்த இரவில் இந்த நிலவில் அழ கான இந்தக் கடற்கரையில் பானுமதியும் ஒருவேளை

வந்தால்........'—என்று நினைத்துப் பார்த்தேன்... என்ன ஆச்சரியம்! நீ நிற்கிருய்!''

''வாஸ்தவமாகவா! உண்மையிலேயே நீங்கள் அப்படி நினைத்தீர்களா? என்ன விந்தை! நானும் ஒரு க்ஷணம் அந்த மாதிரியே நினைத்தேன். ஆனல் அது நிறைவேறும் என்று எதிர்பார்க்கவே இல்லை!''

''பானு! இந்தக் கடலுக்கு அலைகள் இருப்பது போல, மனித உள்ளத்துக்கும் நினைவின் அலைகள் உண்டு என்று ஞானிகள் சொல்கிருர்கள் அல்லவா! அது உண்மையானல், அப்படி நினைவு அலைகள் என்று இருக்குமானல், அவை போய்ச் சேர்ந்து சரிகிற கரை எது தெரியுமோ? பாசத்தினல் பிணிக் கப் பட்ட மற்றெரு உள்ளந்தான். இந்த இதயத் தில் புறப்படுகிற அலைகள் அந்த இதயத்திலே போய்த்தான் மோதிவிழுகின்றன!'' என்ருன் சந்திர மித்திரன்.

மேகத்திட்டு ஒன்றைத் தாவிக்கொண்டே நிலவுக் கரங்களைக் கொட்டியவண்ணம் வான வெளி யிலே குதித்தான் ஒளிச்செல்வன். அந்தப் பிரகாசத் தில், சந்திர மித்திரன் நின்று பேசுவதைக் கேட்டுக் கொண்டே அவன் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள் பானுமதி. தன்னைப்போல அவனுக்கும் துறவுக் கோலம். காஷாய உடை. உடம்பின் ஆதிக்கத்தை வென்று நின்ற அந்தப் பிரும்மச்சரியம், கண்களில் தீக்கங்கு போலக் கனன்று கொண்டிருந்தது. முகத் தில் எல்லையற்ற சாந்தமும், அந்த சாந்தத்திலிருந்து ஒளிபரப்பும் தேஜசும் நிலவுபோலக் குளுமை செய் தன. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு இருந்த வாலி பத்தின் மிடுக்கு, இளமை பொங்கும் அந்தத் துடிப்பு—அதெல்லாம் எங்கே?

''இந்த ஐம்பது வருஷத்தில் எவ்வளவு மாறிப் போயிருக்கிறீர்கள் நீங்கள்!'' என்ருள் பானுமதி.

சந்திர மித்திரன் சொன்னான்: "நீ மட்டும் மாருமலா இருக்கிறாய்! நிலவு வீசுகிற முகம் என்று சொல்வேனே. அப்படிப்பட்ட உன்னுடைய முகத்தில் கடுந்தவமும் இதயத்தின் வரட்சியும் சேர்ந்து எவ்வளவு பெரிய மாறுதலைச் செய்துவிட்டன தெரியுமா! இதிலும் ஒரு அற்புதமான சோபை இருக்கவே செய்கிறது. ஆனால் இது வேறு விதம். இது தெய்விகம்!"

## 2

அகத்திய முனிவரின் கட்டளைக்கு இணங்கச் சோழ நாட்டில் தூங்கெயில் எறிந்த தொடித் தோட் செம்பியன் என்ற அரசன் ஆரம்பித்த இந்திர விழா அவனுக்குப் பின்னரும் ஆண்டுதோறும் காவிரிப்பூம் பட்டினத்தில் சிறப்பாக நடந்து வந்த காலம் அது. இந்த ஆண்டில் நெடுமுடிக் கிள்ளி இந்திர விழாவுக்கு உரிய நியமங்கள் அனைத்தும் இம்மியும் வழுவாமல் இருபத்து எட்டு நாட்கள் நடைபெறவேண்டும் என்று முரசு அறைவித்திருந்தான். எனவே கோலாகலமான களிப்புக்களோடு நாடக மகளிர் அனைவரும் கடற்கரையிலே ஒருமித்தனர். ஆனால் அந்தப் பெண் மான்களின் மத்தியில் மாதவியும் அவளுடைய பொன்மான் மணிமேகலையும் காணப் படவில்லை!

மதுரை மாநகரில் கோவலன் கொலை செய்யப் பட்டான் என்று கேட்டதும் மாதவி இந்த உலக வாழ்வையே வெறுத்தவளாகித் துறவு தாங்கி, பௌத்த சங்கம் சார்ந்து, அறவண அடிகளிடம் 'நால்வகை வாய்மையும் ஐவகைச் சீலமும்' கேட்டுத் தெளிவடைந்து, அந்தத் தர்மத்தையே மேற்கொண்டு விட்டாள். அவளுடைய மகள் மணிமேகலையும் அதே வண்ணம் அதே தூய தவநெறியில் தலைப்பட்டாள். இந்திர விழாவில் இவர்கள் இருவரும் கலந்து

கொள்ளவில்லை. இது நாடக மகளிரிடையே ஒரு பெரும் பரபரப்பை உண்டாக்கியிருந்தது!

இந்தச் சந்தர்ப்பத்திலேதான் அந்தி நேரத்தில் நாகமாலை என்ற நாடகத்தாய் மிக வேகமாகக் கடற்கரை நோக்கிச் சென்றுகொண்டிருந்தபோது மணிமேகலையைப் பார்த்துவிட்டாள். அதுதான் ஊழ்வினையாக முடிந்தது!

நாகமாலையின் மகள் பாநுமதி, சந்திரமித்திரன் என்ற பாணனோடு யாழும் கையுமாக ஏற்கனவே கடற்கரைக்குச் சென்றிருந்தாள். அவர்களைத் தொடர்ந்துவயோதிகப் பருவத்தின் தள்ளாமையையும் மீறி வேகமாக நடந்துகொண்டிருந்தாள் நாகமாலை. வழியில் மணிமேகலை தனது மேனி முழுதும் காஷாயம் போர்த்துக் கையிலே பூமாலையுடன் அறச்சாலை நோக்கிச் செல்வதைப் பிரத்யக்ஷமாய்க் கண்டதும் அவள் திடுக்கிட்டாள். இளம் மேனியின் அழகையெல்லாம் தவம் என்ற மகத்தான நெருப்பில் பொசுக்குவதற்கு ஒரு தாய், அதுவும் மாதவி போன்ற அபார எழில் படைத்த ஒரு தாய், எப்படி மனம் துணிந்தாள் என்று தனக்குள்ளேயே எண்ணமிட்டாள் நாகமாலை. அவளுடைய தாயுள்ளத்துக்கு உண்மையாகவே அது ஒப்பவில்லை. இந்தத் திகைப்பிலும் அனுதாபத்திலும் நாகமாலையின் நடை தளர்ந்தது. நின்றுவிட்டாள். இதை மணிமேகலை கவனித்தாள்.

"என்னம்மா, இந்தத் தள்ளாத வயதையுங் கூடத் தள்ளிக்கொண்டு வேகமாக இந்திர விழாவுக்கு நடந்துபோனவள், என்னைப் பார்த்ததும் இப்படித் தளர்ந்துவிட்டாயே?" என்று கேட்டாள் மணிமேகலை.

"ஒன்றுமில்லை. பெற்ற மனசுக்கு இப்படி ஒரு துணிச்சல் எப்படி வந்தது என்று நினைத்தேன்.

இந்த அழகான இளம் மேனியைத் தீயிலே கொண்டு போய்த் தள்ளிவிட்டாளே உன்னைப்பெற்ற தாய்—''

நாகமாலையின் குரலில் மனப்பூர்வமான அனுதாபம் இருந்தது. மணிமேகலைக்கு மாதவி ஒரு பெரிய கொடுமை இழைத்துவிட்டாள் என்றே அவள் எண்ணினாள். மணிமேகலையோ இந்த வார்த்தைகளைக் கேட்டதும் சிரித்தாள்.

''ஏனம்மா சிரிக்கிறாய்?'' என்று நாகமாலை கேட்டாள். அவளுக்கு அந்தச் சிரிப்பு ஒரு பெரும் புதிராக இருந்தது.

''இளம் மேனியை நெருப்பிலே, நரகக் கொடுந் தீயிலே கொண்டு தள்ளுவது, என்னுடைய தாயா அல்லது பானுமதியின் தாயாகிய நீங்களா? நிம்மதியாக இருந்து யோசித்துப் பாருங்கள்!'' என்று சொல்லிவிட்டு மேலே நடக்க ஆரம்பித்த மணிமேகலை, நாகமாலையின் சூதில்லாத திகைப்பைக் கண்டு மறுபடியும் சொல்லுவாள்: ''அம்மா, தான் பட்ட வேதனையை மகளுக்கும் வழங்குவது கொடுமையா, அந்த வேதனையிலிருந்து மகளைக் காப்பாற்றுவது கொடுமையா? என்னுடைய அன்னை என்னைத் தவம் என்ற கனலில் ஸ்புடம் செய்து மாற்றுக் கொடுக்க முயற்சிக்கிறாள். அவளா கொடுமைக்காரி! இல்லை. சிந்தித்துப் பார்த்தால், கொடுமைக்காரி நீங்கள்தான். உங்களோடு சேர்ந்த ஆயிரக் கணக்கான பானுமதிகளின் தாய்மார்கள் அனைவரும் கொடுமைக்காரிகள்தாம்!''

நாகமாலையின் மனத்துக்கு இந்தத் தத்துவம் அந்த நேரத்தில் பிடிபடவில்லை. அவள் சொன்னாள்: ''ஆனாலும் மாதவிக்குத் தானும் ஒரு காலத்தில் இளமையாக இருந்த நினைப்பே இல்லாமல்தான் போய்விட்டது!''

''இல்லை! அந்த நினைவு மனசில் இன்னும் அப்

படியே பூரணமாக இருப்பதினால்தான் என்னைக் காப்பாற்றத் துணிந்தாள். அதுதான் அறிவோடு கூடிய அன்பு!''

நாகமாலை பதில் பேசவில்லை. நிதானித்தாள். மணிமேகலை மேலும் சொல்வாள் :

''அம்மா! உலகம் என்பது ஒரு துன்பக் கேணி. இன்பம் என்று எண்ணி இறங்கி ஏமாந்த உள்ளம் அதைத் துன்பம் என்று கண்ட பின்புங்கூட ஒப்புக் கொள்ள மறுக்கிறது. கூசுகிறது. வாழையடி வாழையாக அந்தத் துன்பத்தைவழங்கிக்கொண்டே போகிறது. இதுதான் மயக்கம். இதை வெல்லக் கூடிய ஒரு தாய் அபூர்வமானவள்தான். அவளைக் கொடுமைக்காரி என்றுதான் உலகம் சொல்லும். ஏனென்றால் கொடுமைக்காரிகளான தாயார்கள் தான் இவ்வுலகில் அதிகம்—உங்களைப்போல!''

இவ்வாறு சொல்லிவிட்டு விறுவிறு என்று மறைந்தாள் மணிமேகலை.

நாகமாலைக்கு ஒன்றும் ஓடவில்லை. அந்த இடத்திலேயே கிறங்கிப்போய் நின்றாள். புத்தி குழம்பியது.

''நீங்கள் கொடுமைக்காரி. உங்களோடு சேர்ந்த ஆயிரக்கணக்கான பாநுமதிகளின் தாய்மார்கள் அத்தனை பேரும் கொடுமைக்காரிகள்'' என்று மணிமேகலை சொன்ன வார்த்தைகள் நாகமாலையின் மனத்தில் இப்பொழுது உறுத்த ஆரம்பித்தன. அவளுக்கு மனசாட்சி என்று ஒன்று இருந்தது. பாவம்! அது அவளை வேதனைப் படுத்தத் தொடங்கிவிட்டது! கடற்கரையை நோக்கி வேகமாக நடந்து கொண்டிருந்தவள் இப்பொழுது மறுபக்கம் திரும்பி வீடு நோக்கி விரைந்தாள்!

அன்று இந்திர விழாவுக்குப் போகாதவர்கள் மாதவியும் மணிமேகலையும் மட்டுந்தானா? இல்லை, நாகமாலையுங் கூடத்தான்!

## 3

பானுமதி அன்றிரவு மூன்று ஜாமத்துக்குப் பிறகுதான் வீடு திரும்பினுள். உள்ளே வந்தபோது தன்னுடைய அருமைத் தாய் சால்வையை இழுத்து மூடிக்கொண்டு படுத்திருந்ததைப் பார்த்தாள்.

"என்னம்மா உடம்பு உனக்கு?" என்று கேட்டாள் பானுமதி.

"இன்று சாயந்திரத்திலிருந்து ஒருமாதிரியாக இருக்கிறது" என்ருள் நாகமாலே.

"அதனுல்தான் கடற்கரைக்கு நீ வரவில்லேயோ?"

"வந்தேன். மருவூர்ப் பாக்கத்தோடு நடந்தபோதுதான் உடம்புக்கு இன்னும் அதிகமாகி விட்டது."

"இந்த வயதில் கடற் காற்று உடம்புக்குப் பிடிக்க வில்லே" என்ருள் பானுமதி.

நாகமாலே சிரித்தாள்.

"ஏனம்மா சிரிக்கிருய்?" என்று பானுமதி திகைப்போடு கேட்டாள்.

"ஒன்றுமில்லே. உன்னிடத்தில் எனக்கு எவ்வளவு பிரியம் இருக்கிறது என்பதை எண்ணிப் பார்த்தேன். சிரிப்புத்தான் வந்தது" என்று சொன்னுள் அவள்.

"இதென்ன விசித்திர . நினேப்பாக இருக்கிறது!"

"விசித்திரம்தான். நீயே சொல்லேன். உன்னிடத்தில் எனக்கு எவ்வளவு பிரியம் இருக்கிறது!"

பானுமதி பதில் சொல்லவில்லே. இத்தனே நாளும் இல்லாத இந்த நூதனக் கேள்வி அவளுக்குத் திகைப்பையே கொடுத்தது.

"சொல்லம்மா. நான் ஒரு கொடுமைக்காரி என்றுதான் எனக்குப் படுகிறது. நீ சொல்; உன்னிடம் எனக்கு எத்தனை பிரியம் இருக்கிறது என்று."

"என்ன கேள்வி இது! இந்தச் சம்பாபதிக் கடலில் எவ்வளவு தண்ணீர் இருக்கிறது என்று கேட்டால் என்ன பதில் சொல்வது? அது போலத்தான் உன் கேள்வியும். அந்தக் கடலுக்கும் உன்னுடைய அன்புக்கும் எல்லை ஏது?"

நாகமாலை எழுந்து உட்கார்ந்தாள்.

"இல்லை. யோசித்துப் பார்த்தால் நான் கொடுமைக்காரிதான். நான் உன்னைத் துன்பப் பெரும் நரகத்திலேதான் தள்ளுகிறேன். தடுக்க வேண்டியவளே ஊக்கம் ஊட்டுகிறேன்! ஆமாம்!"

நாகமாலை இப்படிச் சொன்ன போது அந்த வார்த்தைகள் ஏதோ ஒரு ஜன்னியின் பேச்சுப் போல இருந்தன. பானுமதிக்கு உடம்பு பதறியது.

"அம்மா! என்னென்னவோ பிதற்றலாகப் பேசுகிறாயே. பயமாக இருக்கிறதே எனக்கு. சந்திர மித்திரனைக் கூப்பிட்டு விடட்டுமா?" என்று ஆதங்கத்தோடு கேட்டாள் அவள்.

"சந்திரனையா! அவனும் இப்பொழுது வருவானா இங்கே?" என்று கேட்டுக் கொண்டே கட்டிலில் சாய்ந்தாள் நாகமாலை.

## 4

மறுநாள் காலை நாகமாலை கண் விழித்தபோது ஒரு தீர்மானத்துக்கு வந்தவளாக மகள் பானுமதியைக் கூப்பிட்டாள்.

"பானு! என்னுடைய உடம்பு சரியாகி நான் எழுந்திருக்க வேண்டும் என்றால் நீ எனக்கு ஒரு வாக்குறுதி தரவேண்டும். இல்லையென்றால் நான்

மடிந்தாலும் அது நிம்மதியான மரணமாக இராது!'' என்றாள் நாகமாலை.

''அம்மா, என்னிடம் வாக்குறுதிகூடக் கேட்க வேண்டுமா! நீ சொல்லி நான் செய்யாதது எது உண்டு?''

''அது சரி. ஆனாலும் இப்பொழுது வாக்குறுதி வேண்டும்'' என்று பதறினாள் தாய்.

''ஆகட்டும். வாக்குறுதி கொடுக்கிறேன்'' என்று சொல்லியவாறு தாயின் அருகிலே அந்தக் கட்டிலில் உட்கார்ந்தாள் பானுமதி.

நாகமாலையின் குரல் கம்மிற்று. சிரமப்பட்டுத் தன்னுடைய உடம்பிலிருந்த பலம் அனைத்தையும் ஒருமிக்கிறவளைப் போல ஒருதரம் குரலைச் சரிப் படுத்திக்கொண்டு சொன்னாள்: ''பானு! இன்றிலிருந்து நீ சந்திரமித்திரனை மறந்துவிட வேண்டும்!''

அவ்வளவுதான்! பானுமதி கட்டிலில் இருந்து துடித்துக்கொண்டு எழுந்தாள்.

''என்ன சொல்லுகிறாய் அம்மா?''—அதற்கு மேல் பானுமதிக்கு வார்த்தை வரவில்லை. அப்படியே தரையில் தடால் என்று உட்கார்ந்தாள். தாயின் கால்களில் தலையைச் சாய்த்தவாறு அவளுடைய இரு பாதங்களையும் கைகளில் பற்றிக்கொண்டாள். கண்ணீர் பொலபொலவென்று உதிர்ந்த வண்ணமாக இருந்தது.

''பானு! இனி நாம் இருவரும் புத்த தேவனுக்கு அடிமைகள். உன்னை நான் அறவண அடிகளின் தவச்சாலையில் சேர்க்கத் தீர்மானித்துவிட்டேன்!''

பௌர்ணமி நிலவிலே கடல் அலைகள் கொந்தளிப்பதைக் கண்டு களித்துள்ள பானுமதியின் இளம் உள்ளத்தில், இப்பொழுது வேதனையின் அலைகள் ஆவேசத்தோடு கொந்தளித்தன.

"அம்மா! நீயா இந்த வார்த்தை சொல்கிறாய்! அந்தக் கொடுமைக்கார மாதவியா நீ! உன்னுடைய மனசுமா கல்லாகிவிட்டது!"

பானுமதி தேம்பித் தேம்பி அழுதாள். நாகமாலை அளவு கடந்த பரிவுடன் மகளை வாரி அணைத்துக் கொண்டு சொன்னாள் :

"கண்ணே, ஈரமற்ற மனம் என்று நாம் நினைக்கிற மனந்தான் அன்புக் கடலாக இருக்கிறது. நேற்று வரை கரையற்ற கடல் என்று நினைத்த என் மனம் மூட இருளில் மூடிக் கிடந்த கல்லாய், பாறையாகத்தான் இருந்தது!"

பெற்ற அன்னையிடமிருந்து வந்த இந்த வார்த்தைகள் பானுமதியின் செவிகளைத் துளைத்தன. ஆனாலும் அவளால் வேறு என்ன சொல்லக் கூடும்?

"அம்மா, அப்படியானால் நிச்சயம் அவரை மறக்கும்படியேதான் சொல்கிறாயா என்னை?" என்று கேட்டாள்.

தன் பார்வையை மறுபக்கம் திருப்பிக்கொண்டு "ஆமாம்" என்று உறுதியோடு சொன்னாள் பானுமதியின் அருமை அன்னை நாகமாலை.

## 5

"என்ன பேசாமல் நிற்கிறாய்?" என்று கேட்டான் சந்திரமித்திரன்.

"நீங்கள் மட்டும்? நீங்கள் ஏன் பேசாமல் நிற்கிறீர்கள்?" என்று கேட்டாள் பானுமதி.

"அந்தப் பழைய சம்பவங்களை யெல்லாம் அப்படியே ஒரு ஓட்டம் மனத்தில் ஓடவிட்டேன்."

"நானுந்தான் — நினைவுகளின் சுழற்சிதானே வாழ்க்கையும் அதன் சம்பவங்களும்!" என்றாள் பானுமதி.

தவச்சாலையிலிருந்து வைகறை மணியின் நாதம் காற்றிலே வந்தது. அந்த மணியோசை நினைவின் அலைகளிலே மிதந்து சென்ற உள்ளங்களைப் பிடித்துக்கொணர்ந்து, கரையிலே சேர்த்தது.

"அப்படியானால் நான் புறப்படட்டுமா?" என்று பானுமதி சொல்லி முடிப்பதற்கு முன்பு சந்திர மித்திரனும் கைகூப்பியவாறு மறுபக்கம் திரும்பிச் செல்லச் சித்தமாயிருந்தான்.

ஓயாமல் அலை புரளும் கடலுக்கு மேலே நிலவு நலிந்துவிட்டது. கரையில் தெற்கும் வடக்குமாக இருவரும் பிரிந்தனர். சற்றே நடந்தனர். உடனே சொல்லி வைத்தாற்போல், ஏதோ நினைப்பில், இருவரும் ஒரே சமயம் திரும்பிப் பார்த்தனர்.

"என்ன திரும்புகிறாய்?" என்று கேட்டான் சந்திரமித்திரன்.

"நீங்கள் ஏன் திரும்பிப் பார்த்தீர்கள்?" என்றாள் பானுமதி.

"அன்பு என்பது அவ்வளவு கடினமான பாசக் கயிறாக இருக்கிறது" என்று வார்த்தைகளைத் தேர் இழுப்பது போல உள்ளத்திலிருந்து இழுத்தான் சந்திரமித்திரன்.

இருவரும் மீண்டும் பழைய இடத்திற்கே திரும்பி நடந்து வந்தனர்.

"உடல் என்ற ஸ்தூலம் அற்றுவிடுமானால், உள்ளம் என்ற உலகில் அன்பு என்னும் தூய உறவுக்குப் பாபம் ஏது? களங்கம் ஏது?" என்று கேட்டான் சந்திரமித்திரன்.

"இல்லைதான். ஆனாலும் பாசம் என்பது எப்பொழுதுமே.........."

"இல்லை. புத்ததேவனிடத்து நாம் செலுத்தும் அன்பையும் பாசம் என்ற பொருளிலே சேர்த்துவிட

முடியுமா? அந்த அன்பு, அந்தப் பாசம், வேறு தானே? அதுபோல மனித உள்ளங்களுக்கு மத்தியிலும் தெய்விக அன்பு என்று ஒன்று இருக்கிறதல்லவா?'' என்றான் அவன்.

கிழக்கில் வானம் வெண்மை அடைந்து தெளிந்து வந்தது. சூரிய உதயத்தை வரவேற்பதற்காகக் கடலின் அலைகள் பக்தி சிரத்தையுடன் தலை தாழ்த்தி ஆயத்தமாகிக்கொண்டு வந்தன.

"புத்த தேவனுடைய சரண கமலங்களை அடைகிற உள்ளங்கள் அனைத்துமே ஸ்தூலப் பிடிப்பிலிருந்து விடுபட்டு, கலந்து நிறைந்து ஏகோபித்து ஐக்கியமே ஆகின்றன. அதுதானே மகா சங்கமம்!'' என்று சொல்லியவாறு இருவரும் ஒருமித்து நடந்தார்கள்.

மனித உள்ளத்தின் ஆசாபாசச் சுழல்களைப் போல அந்தநீலக் கருங்கடல் அதனுடைய கரையின் வட்டத்துக்குள்ளேயே குமைந்து கொண்டிருந்தது. சந்திரமித்திரனும் பானுமதியும் அந்தக் குமைவையெல்லாம் கடந்து கரையின் மேட்டிலே ஏறித் தவச்சாலையை நோக்கி ஒருமித்து நடந்தார்கள்!

# எதிரொலி

'கங்காதரன் கௌரிக்கேற்ற கணவன்' என்று வாழ்த்துத் தந்திகளும், கடிதங்களும் ஏகோபித்து முழக்கின. கங்காதரனுக்கு அவற்றைப் படிக்கும் போது வெகு ஆனந்தமாயிருந்தது. ஒரு நண்பன் 'நீங்களிருவரும் கங்காதரனும் கௌரியும் போலவே ஈருடல் ஓருயிராய் வாழ்வீர்களாக' என்று எழுதி யிருந்தான். அந்தக் கடிதத்தை உடைத்துச் சட்டைப் பைக்குள் சொருகினவன், நெஞ்சிலேயே சொருகி விட்டான்.

அந்தக் கடிதம் சொன்னது போல, இருவருக் கும் பெயர்ப் பொருத்தம் எல்லாம் சரியாய்த்தா னிருந்தது. ஆனால்....?

## 2

புருஷன் வீட்டிற்கு வந்து சில தினங்களுக்குள் கௌரி பெரிய வீட்டுப் பெண்களையெல்லாம் சிநேகம் பிடித்து விட்டாள். கௌரியை அவர்கள் எல்லாருக்கும் மிகவும் பிடித்திருந்தது.

அவளுடைய பெயர் கௌரி. அழகிலோ என் றால் அவள் கவரிமான்தான். அவளுடைய விளை யாடும் விழிகள் கவரிமானின் விழிகள். அவள் நடையின் ஒயிலிலோ, இன்பக் கானகத்தில் மெல்ல மெல்ல மிதித்துச் செல்லும் ஒரு இளமானின் கதி துலங்கும். அவளுடைய நிறமோ மானின் நிறம். ஆனால்.......?

ஆனால், இந்த மானுக்கு வாய்த்த கணவன்? கருப்பில் அழகுள்ளவர் எத்தனை பேர்? கங்காதரன் அதற்கும் ஒரு விதி விலக்காக இருந்தான்!

பிரமன் கௌரியைப் படைக்கும்போது, அவளுடைய கண்டத்திலே ஒரு அமுத கலசத்தைப் பதித்திருந்தான். ஆனால், எந்த மனிதன் அந்த அமுத கலசத்திலிருந்து இன்பம் பருக வேண்டுமோ அந்த மனிதனுடைய செவிகளிலே பிரமன் செவிச் செல்வத்தை வைக்கத் தவறிவிட்டான். இவ்வளவு பெரிய தவறு செய்த சிருஷ்டிகர்த்தா, இன்னொரு பெரிய தவறும் செய்துவிட்டானே — கௌரியினுடைய பூங்கொத்துப் போன்ற விரல்களில் வீணையின் நரம்பிடை அமானுஷ்யமான தெய்விக இசையை வர்ஷிக்கக் கூடிய ஒரு மந்திரசக்தியையும் பின்னி ஓடவிட்டிருந்தான்! பாவம், கங்காதரன்?

மனித சமூகம், இவ்விருவரையும் சதிபதிகள் என்றது. இவ்விருவரையும் சேர்த்துப் பிணைத்துக் கொண்டு ஒரு பொற்சரடு கௌரியின் கழுத்திலே சுற்றிக்கொண்டு கிடந்தது. ஆனால், அவர்களுடைய இதயங்களோ என்றால்..........?

## 3

"நான் வீணை வாசிக்கிறது உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?" என்று கேட்டாள் கௌரி. மனைவி வீட்டிற்கு வந்த புதிதில் ஒரு மாதிரியாக இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லி வந்தான் கங்காதரன். பிறகு வர வர அவனுக்கு அருவருப்பாய் இருந்தது. வீணை என்ற உயிரற்ற வஸ்துவின் மூலம் எப்படி இத்தனை இன்பத்தை உயிருள்ள மனங்கள் அனுபவித்துவிட முடியும். பிறரையுந்தான் எப்படி இன்பப்படுத்திவிட முடியும்—என்றே அவனுக்குப் புரியவில்லை.

இந்த நிலையில், அடிக்கடி தன் மனைவி தன் சிநேகிதிகளின் வீட்டிற்கு வீணை வாசிக்கப்போவது அவனுக்குப் பரிகாசமாயிருந்தது. பிறகு இந்தப் பரிகாச உணர்ச்சி வெறுப்பாக மாறியது.

கௌரியோ?—அவள் இதை யெல்லாம் லக்ஷியம் செய்வதே இல்லை. அவளுடைய இதயம் சதா சர்வதா சங்கீத சரஸ்வதியோடேயே உறவாடிக் கொண்டும் உரையாடிக் கொண்டும் இருந்தது. சாதாரண மனிதனுடைய பொருளுலகத்து இன்னல்கள், ஏக்கங்கள், சாமானிய மனித இதயத்தின் சகஜமான உணர்ச்சிகள் வேகங்கள்—இவற்றிற் கெல்லாம் அப்பால் நின்று சுடர்விட்டது கௌரியின் இசை ஞான ஜோதி!

## 4

அவள் கேட்டாள். "உங்களுக்கு டாக்டர் ரங்கநாதனைத் தெரியுமா?" என்று.

"இந்த ஊரில் முழத்துக்கொரு டாக்டரும் சாணுக்கொரு பிசாசும் உண்டு. இதையெல்லாம் யார் கண்டார்கள்?" என்று பதில் சொன்னான் கங்காதரன்.

"அவர் ரொம்ப ஞானஸ்தர். வீணை என்றால் அவருக்கு உயிர். என்னுடைய வாசிப்பை ரொம்ப அனுபவித்தார். உங்களைக் கூடப் பார்க்க வர வேண்டும் என்று சொன்னார்......"

"காபி தயாராய் விட்டதா?" என்று கேட்டுக் கொண்டே, மாடியிலிருந்து கீழே இறங்கினான் கங்காதரன்.

## 5

கங்காதரனுக்கு அசாத்தியக் கோபம் வந்தது. சகிக்க முடியவில்லை. சாயந்திரம் ஆறு மணியிருக்கும். ஆபீஸிலிருந்து அப்போதுதான் களைப்போடு வீட்டுக்கு வந்திருக்கிறான். ஆனால், வீட்டில் கௌரி இருந்தால்தானே? மேஜைக்கு மேல் ஒரு குறிப்பு இருந்தது. அதை எடுத்து வாசித்துப் பார்த்தான்

''டாக்டர் ரங்காவின் வீட்டில் ஒரு டின்னர். கட்டாயம் வீணை வாசிக்க வேண்டும் என்று ரொம்ப வற்புறுத்து கிறார்கள். அவருடைய மனைவி வந்து என்னை அழைத் துப் போகிறாள். சௌகரியப்பட்டால் நீங்களும் வாருங்களேன்.

கௌரி.

பிற்குறிப்பு: அடுப்பில் காபி போட்டு வைத்திருக்கிறேன்.''

கங்காதரன் சிரித்தான். அந்தச் சிரிப்பிலே மனித இதயத்தின் கோரமான உணர்ச்சிகள் அனைத் தையும் சிதறினான். 'என் மனைவி தன்னுடைய சாமர்த்தியத்தை விளம்பரப்படுத்துகிறாளாம். இந்த விளம்பரத்தில் நானும் பங்கு எடுத்துக்கொள்ள வேண்டுமாம்!' என்று தலையிலடித்துக் கொண்டே, சிரித்தவண்ணம், வானொலிப் பெட்டியின் விசையை முடுக்கினான். அது சிரித்தது. 'உலகம் சிரிக்கிறது' என்று ஒரு நிகழ்ச்சியை ஆரம்பித்தார் அறிவிப் பாளர். 'உலகம் யாரைப் பார்த்துச் சிரிக்கிறது?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான் கங்காதரன்.

இரவு, கௌரி வருவதற்கு மிகவும் நேரமாகி விட்டது. வந்ததும் சமையலறைக்குள் போய்ப் பார்த்தாள். காபிப் பாத்திரம் அடுப்பில் அப்படியே இருந்தது. ஆனால், காபி முழுதும் திரைந்து ஆடை படர்ந்து புளித்துப் போயிருந்தது.

"ஏன் நீங்கள் காபியைக் குடிக்கவில்லையா? திரைந்து போய் விட்டதே!''

''அது என் குற்றமா?''

"நீங்கள் குடித்திருந்தால் திரைந்திருக்குமா?''

''நீ அதை இப்படி அலக்ஷியமாக வைத்துப் போனதால்தானே, அது திரைந்து விட்டது?''

கங்காதரன் இரவு ஒன்றும் சாப்பிடவில்லை. பேசாமல் படுத்துக் கொண்டான். மறுநாட் காலை சீக்கிரமாக எழுந்து, வெகு சுரு சுருப்போடு ஆபீ

ஸுக்குப் போய் விட்டான். ஆனால், ஆபீஸில் வேலை ஓடவேண்டுமே. முதல் நாள் இரவு கௌரி அவ்வளவு நேரம் கழித்து வந்தது, அவனுக்குப் பலவித சந்தேகத்தைக் கொடுத்தது. மேஜைமேல் தலையைச் சாய்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

"சார்!" என்று யாரோ கூப்பிட்டார்கள். தலையை நிமிர்த்தி ஏறிட்டுப் பார்த்தான். முன்பின் தெரியாத ஒரு மனிதர் எதிரே நின்று கொண்டிருந்தார்.

"தாங்கள் தானே கங்காதரன்?" என்று கேட்டார் அந்தப் புது மனிதர்.

"அந்த அபாக்கியசாலி நான் தான்!"

"நன்றாயிருக்கிறது. தங்களைப் போல் பாக்கியசாலி யாரிருக்கிறார்கள்? ஸ்ரீமதி கௌரியின் கணவரல்லவா தாங்கள்!"

கங்காதரன் உதட்டைக் கடித்துக்கொண்டான்.

"சார், நான் உங்களிடம் ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்வதற்காகத்தான் வந்தேன். தயவு செய்து மன்னிக்க வேண்டும்!" என்றார் அந்த மனிதர்.

கங்காதரன், "மன்னிக்கவேண்டியது என்ன இருக்கிறது, சொல்லுங்கள்" என்றான்.

அந்த மனிதர் சற்று மௌனமாயிருந்தார். ஏதோ தான் சொல்லக்கருதியதைச் சொல்லத் தயங்குபவர் போல இமைகளை மூடி மூடி விழித்தார். பிறகு சொன்னார்:

"ஒன்றுமில்லை. தங்கள் மனைவியின் கச்சேரியை டாக்டர் ரங்காவின் வீட்டில் கேட்டேன். ரொம்ப அற்புதமாயிருந்தது."

கங்காதரன் அவருடைய முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"தங்கள் மனைவி கட்டாயம் அடிக்கடி கச்சேரி செய்ய வேண்டும். அப்பொழுதுதான், நமது நாட்டிற்கே பெரிய தொண்டு செய்தவர் ஆவீர்கள்" என்று சொல்லிவிட்டு, நகர்ந்தார். சற்றுத் தூரம் போனவர், மறுபடியும் நின்றார். கங்காதரனைப் பார்த்துத் திரும்பினார். தான் சொல்லி யிருக்க வேண்டிய விஷயத்தைச் சொல்லாமல் வேறு ஏதோ சொல்லி மழுப்பி விட்டவர் போல, மீண்டும் திரும்பினார்.

கங்காதரனுக்கு ஆத்திரம் வந்தது. நெற்றியைப் பிசைந்து கொண்டான்.

அந்த மனிதர் மிக்க தைரியத்தை வரவழைத்துக் கொள்ளுபவர் போல ஒரு தரம் இருமிக் கொண்டு சொல்லுவார்:

"ஐயா, தயவுசெய்து உங்கள் மனைவியை ரங்காவின் வீட்டிற்கு அடிக்கடி அனுப்பாதீர்கள்!"

இப்படிச் சொல்லிவிட்டு, ஒரு கணம்கூட அவ்விடத்தில் நிற்க விரும்பாதவர் போல மறைந்து விட்டார் அவர்.

ஏதோ ஒரு உலகத்திலிருந்து வந்து போன மாயாவி ஒருவனுடைய வார்த்தைகள் போல இந்த மொழிகள் கங்காதரன் செவியில் விழுந்தன.

கங்காதரன் நாற்காலியை விட்டு எழுந்தான். 'விறு விறு' என்று வீட்டை நோக்கி நடந்தான்.

வீட்டில் அவளைக் காணோம். ஒரே விரக்தியோடு மாடிக்குப் போய், வானொலிப் பெட்டியின் அருகே உட்கார்ந்தான். பிரடையை முடுக்குவதற்காக அதில் கையை வைத்தான். அந்தச் சமயத்தில் வெளியே யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்டது. கௌரி அறையில் நுழைந்தாள்.

"டாக்டர் ரங்காவின் வீட்டிற்குத்தானே போயிருந்தாய்?"

"உங்களுக்கு ஜோஸியம்கூடத் தெரியும் போலிருக்கிறதே"—இந்த வார்த்தைகள் அந்த நிரபராதியினுடைய இதயத்திலிருந்து பொங்கி வந்தன.

"ஜோஸியம் மட்டுமா தெரியும்? எல்லாம் தெரியும் எனக்கு!" என்று பல்லைக் கடித்தான் கங்காதரன்.

கௌரி மான்போல மிரள மிரள விழித்தாள்.

"உங்களுக்கு உடம்பு என்ன? ஏன், ஒரு மாதிரி இருக்கிறீர்கள்?" என்று கேட்டுக்கொண்டே மாடிப் படிகளில் இறங்கினாள் கௌரி.

வீணையின் நரம்புகளை சுருதி மீட்டியவண்ணம் படிகளில் ஏறி ஒரு விநாடியில் மான்போல் துள்ளி அறையில் நுழைந்தாள். அவளுடைய பூங்கொத்துப் போன்ற விரல்கள் வீணையின் தந்தியிலே ஊடாட ஆரம்பித்தன. அவளுடைய கண்டத்தின் அமுத கலசத்திலிருந்து,

"சங்கடமே இகம்
சங்கடமே இகம்
சங்கீதமே சுகம்"

என்ற வார்த்தைகள் வந்தன.

இதுவரை சகித்துக்கொண்டிருந்த கங்காதரன் இப்போது நாற்காலியை விட்டு எழுந்தான். வெறி பிடித்தவன்போல் பாய்ந்தான். கௌரியின் கரங்களிலே தவழ்ந்து கொண்டிருந்த அத்தெய்விக வாத்யத்தைக் காலால் ஓங்கிப் 'படார்' என்று இடறினான். ஐயோ...சுருதி கலைந்து நரம்பு சின்னாபின்னமாகி அலங்கோலமாய்க் கதறிக்கொண்டு சுண்டிச் சிதறியது வீணை! பாவம்! கௌரியினுடைய உடலின் நரம்புகள் அனைத்தும் சுண்டிச் சிதறின.

'இது என்ன கூத்து' என்று ஒரே திகைப்போடு கங்காதரனைப் பார்த்தாள் கௌரி. அப்

போது அவளுடைய விழிகள் நீர்மல்கி அங்குமிங்கும் மருண்டன. "டாக்டர் ரங்காவின் வீட்டிற்குப் போகும் காலைத் தறியாது விட்டதால் தானே இது என்ன என்று கேட்கிறாய்? அன்றே தறித்திருந்தால் இன்று மத்தியானம் எவனோ ஒரு பயல் வந்து என்ன வெல்லாமோ அபவாதம் சொல்லும்படி......"

இதற்குள், அந்த கௌரிமானின் நெஞ்சிலே எண்ணத்தொலையாத அம்புகள் ஊடுருவிப் பாய்ந்து விட்டன. 'ஓ' என்று கூச்சலிட்டாள் அவள். என்ன தோன்றிற்றோ, தெரியவில்லை. இந்த சம்பவத்திற் கெல்லாம் காரணமாய் இருந்த வீணையை ஓடியே போய் எடுத்தாள். தலைக்குமேலே அதை உயர்த்தி ஒரு ஓங்கு ஓங்கினாள். தடால் என்று அதைக் கங்காதரனுக்கு முன்பாகப் போட்டு உடைத் தெறிந்துவிட்டு, விம்மி விம்மி அழுதாள். மறுகணம், அழுது கொண்டே மாடியிலிருந்து இறங்கினாள்.

கங்காதரன் அந்தச் சிதறுண்ட வீணையின் உடைந்த துண்டுகளையே பார்த்துக்கொண்டு அறை யில் அங்குமிங்கும் உலாவினான். அவனுக்குப் பைத்தியம் பிடித்ததுபோ லாகிவிட்டது.

அந்தப் பைத்திய வெறியில், ஏனோ, வானொலிப் பெட்டியின் விசையைத் திருப்பினான். அதன் வாயி லிருந்து யுத்தச் செய்திகள் வெளி வந்துகொண் டிருந்தன. உடனே, மேஜையின் டிராயரைக் கீழே இழுத்துப்போட்டான். அதிலிருந்து கடிதக் கட்டு உலைந்து விழுந்தது. அதை எடுத்தான்.

கல்யாணத்தன்று வந்த வாழ்த்துக் கடிதங்கள் அவை! ஒவ்வொன்றாய் எடுத்துக் கிழித்தெறிந்தான். அந்தக் கடிதமும் கையிலகப்பட்டது. 'நீங்களிரு வரும் கங்காதரனும் கௌரியும் போலவே, ஒருடல் ஒருயிராக......' முழுதும் வாசிக்கும் முன், அதைச் சுக்கு நூறாகக் கிழித்துக் காற்றில் ஊதிப் பறக்க விட்டான்.

மனிதனுக்கு உணர்ச்சி வேகத்தில் என்ன செயல் எல்லாம்தான் செய்யத்தோன்றுமோ! டிராயரை ஓங்கி மேஜைக்குள் சொருகினன். அந்த அதிர்ச்சியில், மேஜை மேலிருந்த புத்தக ஷெல்பிலிருந்து ஒரு புத்தகம் கீழே விழுந்தது. அதை எடுத்தான். அது ஒரு தனிப்பாடற் திரட்டு. ஒரு பக்கத்தில் அடையாளம் வைத்திருந்தது. அந்தப் பக்கத்தைத் திரும்பினன். அவ்வையார் பாட்டு:

அற்றதலை போக அருததலை நான்கினையும்
பற்றித் திருகிப் பறியேனே—முற்றும்
மரமனையா னுக்கிந்த மானைப் படைத்த
பிரமனையான் காணப் பெறின்

ஒருதரம் படித்தான். சற்றுப் புரிந்தது. பிறகு, கீழே எழுதியிருந்த விளக்க உரையைப் படித்தான்.

அன்று பரமசிவன் பிரமனுடைய தலை ஒன்றை அற்றுவிட்டான். அது போக அறுமல் நிற்கும் தலைகள் நான்கு உண்டு. நான் பிரமனைக் காண்பேனுனல், அந்த நான்கு தலைகளையும் கொய்துவிடுவேன். (ஏன்?) முற்றிலும் மரத்தைப்போன்றவனுக்கு, ஐயோ, இவ்வளவு அழகிய மானை மனைவி என்று ஆக்கிவிட்டான் அல்லவா அவன்?

அவ்வளவுதான்! அந்தப் பாட்டைத் திரும்பத் திரும்பப் படித்தான். ஒவ்வொரு முறை படிக்கும் போதும், இதுவரை கண்டறியாத புதிய உலகத்துக் காட்சிகளை எல்லாம் அவன் கண்முன் கொண்டு வந்தது அந்தப் பாட்டு!

"அவளுடைய புத்தியின் கூர்மை, வாளின் கூர்மையைப் போன்றது. என் இதயம் என்னை அறியாமலே, அந்தக் கூர்மைக்கு அஞ்சி அவளுடைய அருகில் என்னை அழைத்துச்செல்லத்தவறிவிட்டது. அவளுடைய இதய விலாசத்தை நெருங்க முடியாதபடி, அவளுடைய அறிவுச் சுடர்என்னைத் தகித்தது. 'என்னுடைய நிலைக்கு உன்னைத் தாழ்த்திக்கொள்'

என்றேன். அவளுடைய நிலைக்கு என்னை நான் உயர்த்திக்கொள்ள விரும்பினேனில்லை.''

கங்காதரனுடைய கண்ணில் நீர் தேங்கியது. அவனுடைய நாவில் வறட்சி ஏற்பட்டது. 'கௌரி' என்று கூப்பிட்டான். கௌரி......?

## 6

டாக்டர் ரங்காவுக்கு ஒரே திகைப்பாய் இருந்தது; ரொம்பவும் எதிர்பாராத விதமாயிருந்தது.

என்றும், எப்பொழுதும், இன்பமான இசை பொங்கும் அவளுடைய இதயத்திலிருந்து, இந்த அலங் கோலமான துன்பப் பிரலாபம் வருவானேன்? டாக்டர் ரங்காவுக்குப் புலப்பட்டது, கௌரியினுடைய இதயவீணை சுருதி கலைந்து விட்டது என்று!

''கௌரி, ஏது இவ்வளவு எதிர்பாராதவிதமாக இப்பொழுது இங்கு வந்தீர்கள்...?''

ரங்காவிற்கு நா குழறிற்று.

''இனி இங்கு வரப்போவதில்லை என்று சொல்லுவதற்காக வந்தேன்......''

கௌரி விம்மி விட்டாள்.

''அதற்காக இந்த நேரத்தில்......''

அடைபட்டுக் கிடந்த வெள்ளம் உடைப்பெடுத்துக்கொண்டு பாய்வதுபோல, அவளுடைய இதயத்தில் பெருகிநின்ற சோக வெள்ளம் கண்களை உடைத்துக் கொண்டு பாய்ந்தது. ஒரே ஆற்றாமையோடு ஓலமிட்டாள் அவள்!

ரங்காவுக்கு மனம் தாங்க முடியவில்லை. கண்களை மூடிக்கொண்டு சோபாவில் சாய்ந்து விட்டார்.

''நான் இனி இங்கு வரக்கூடாதாம். எவனோ

ஒரு பாவி அவரிடம் போய் ஏதோ உளறினும்..."

ரங்கா மௌனமாக இருந்தார்.

"அந்த முட்டாள் தான் உளறினன். அவரும் அதை......"

"கௌரி. தயவுசெய்து தாங்கள் அப்படிச் சொல்லாதீர்கள். அவர் தங்கள் கணவர்......"

"என்ன! அவர் சொல்வதை நீங்களும்......!"

டாக்டர் ரங்கா சோபாவை விட்டு எழுந்தார்.

"கௌரி, உங்களிடம் உண்மையைச் சொல்லி விடுகிறேன். இன்று மத்தியானம் உங்கள்கணவரிடம் போய்ச் பேசினவன் நான்தான்......"

கௌரியின் கண்களிலே சொல்ல முடியாத வேதனை உணர்ச்சி தோன்றியது.

"அப்படியானல் என்னை இங்கு வரக்கூடாது என்று நீங்கள் சொல்கிறீர்களா?" என்று அவள் கேட்டாள். ரங்கா கொஞ்சநேரம் பதில் பேசவில்லை. "கௌரி, நான் அப்படிச் சொல்ல விரும்பவில்லை. ஆனல், சொல்லுகிறேன். நேற்று என் வீட்டில் தங்கள் கச்சேரியின்போது பலர் என்ன பேசிக் கொண்டிருந்தார்கள் என்பதைக் கவனித்தேன். தங்களுடைய நன்மைக்காகச் சொல்லுகிறேன், தாங் கள் இங்கு வரவேண்டாம் என்று. மனித சமூகம் தயக்கமின்றிக் கூறும் பொய் அபவாதத்திலிருந்து தங்களைத் தப்புவிக்கும் பொருட்டு......"

அதற்குமேல் கௌரி ஒரு கணம்கூட அங்கு நிற்கவில்லை. 'போய் வருகிறேன்' என்று சொல்லி விட்டு வெளியேறினள்.

அப்பொழுது நன்ருய் இருட்டிவிட்டது. கார் காலத்து வானத்தைக் கன்னங்கரிய இருள் திரை யிட்டு மூடியிருந்தது. வடகோடி மூலையில், ஒரு நக்ஷத்திரம் ஏகாந்தமாகச் சுடர்விட்டுக்கொண்டு

தொங்கியது, மனித இலட்சியத்தைப் போல. அதைப் பார்த்துக் கொண்டே நடந்தாள் கௌரி! "கௌரீ, தயவு செய்து அப்படிச் சொல்லாதீர்கள். அவர் தங்கள் கணவர்" என்று ரங்கா கூறியது இன்னும் அவள் செவிகளில் கேட்டுக்கொண்டே யிருந்தது. அப்பொழுது மேற்கே இருந்து வீசிய காற்று கௌரியின் காதோடு கீழ்க்கண்டவார்த்தை களைச் சொல்லிப் போயிற்று.

"கல்லானாலும் கணவன்
புல்லானாலும் புருஷன்"

டாக்டர் ரங்காவின் வீட்டு வானொலிப் பெட்டியி லிருந்து வந்த குரல் அது! யாரோ ஒரு தமிழ்ப்பெரி யார் தமது ரேடியோப் பிரசங்கத்தை அவ்வாறு முடித்துக்கொண்டிருந்தார்.

உண்மையில், அது வானொலியா? அல்லது அசரீரியா? இல்லை, கௌரியினுடைய இதயத்தின் எதிரொலிதானா?

# விதியின் விதி

மனிதர்களுடைய வாழ்க்கை வரலாறுகளேயும் எதிர்கால நிகழ்ச்சிகளேயும் ஊர் பெயர் முதலிய விவரங்களோடு கூறுகிற நாடி சோதிட ஏடுகளே நீங்கள் பார்த்திருக்கிறீர்களோ, இல்லேயோ. சில ஆண்டுகளுக்கு முன்பு நாடி சோதிடம் நவரத்தின முதலியாரைச் சந்திக்க நேரிட்டபோது முதன் முதலாக அவரிடம் நான் கேட்ட கேள்வி, "ஐயா, இந்த ஏடுகள் எல்லாம் உங்களுக்கு எப்படிக் கிடைத்தன?" என்பதுதான். இதற்கு முதலியார் சொன்ன பதில் விந்தையாக இருந்தது.

ஐம்பது அறுபது ஆண்டுகளுக்கு முன்பு, தஞ்சாவூர் நூல் நிலேயத்தில் புழுதி மூடிச் செல் லரித்துக் கொண்டிருந்த ஏட்டுக் குவியல்களே ராத்தல் கணக்காக நிறுத்து ஏலம் போட்டார் களாம். அந்த ஏலத்தில் நம்முடைய முதலியாரும் சில ராத்தல்கள் நிறுத்து வாங்கிக் கொண்டு வந்தாராம்!

இந்த நிகழ்ச்சியை ஆராய்வதற்கு இது இடம் இல்லே. அந்த ஏடுகளின் தலேயெழுத்து—அவற்றின் ஜாதகம்—எப்படி யெல்லாம் இருக்கிறதோ, யார் கண்டார்கள்! ஆனல் இங்கு குறிப்பிடவேண்டிய விஷயம் அந்த ஏடுகளின் நுண்ணிய சின்னஞ் சிறிய கூட்டெழுத்துக்கள்தான்!

அவற்றைப் பார்த்து அதிசயித்துப் போன வனுகை, சோதிடர் அவர்களிடம் அவருக்குப் பயன் படாத ஏதாவது ஒரு கட்டு ஏட்டை எனக்குத் தர முடியுமானல் தராசும் படிக்கல்லும் இல்லாமல் கொடுக்கும்படி தயவாகக் கேட்டேன். அதன்

பயனுக ஒரு ஏட்டுத் தொகுதி கிடைத்தது. அதில் ஜாதகங்களின் குறிப்பே இல்லே. "கிரக சாந்தி" என்று தலேப்பிலே மகுடம் சூட்டி யிருந்தது. கிரகங் களுக்குத் தோஷ பரிகாரம் செய்கிருர்களே அதைப் பற்றி விரிவாகச் சொல்லி யிருக்கிறது போலும் என்று நினைத்தேன். ஆனுல் படித்துப் பார்த்தால் அது ஒரு கதையாக இருந்தது. "கட்டளேக் கலித் துறை" என்ற யாப்பு முறையில் அந்தாதி வரிசை யில் எழுதப்பட்டிருந்தது அது.

சோதிடத்தில் நம்பிக்கை இல்லாதவர்களுக்கு ஒரு விநோதமாகவும், நம்பிக்கை உள்ளவர்களுக்கு மேலும் ஒரு உறுதிப் பாடாகவும் இருக்கும் என்று கருதிக் கதையின் சாரத்தைக் கீழே தருகிறேன்.

## 2

பொதிகைமலேச் சாரலில் மாலேநேரம். இன்ப மான தென்றற் காற்றிலே எங்கிருந்தோ புல்லாங் குழலின் ஒலி சுகமாக வருகிறது. அந்த ஒலியோடு இணைந்து ஆடுமாடுகளின் கழுத்திலே கட்டியுள்ள மணிகளும் சலங்கைகளும் 'கண கண' வென்று ஒலி செய்கின்றன. புல்லாங்குழலின் ஓசை நின்றபோ தெல்லாம் ஊடே ஊடே ஒரு பாடல் கேட்கிறது :

"மோன நிலேயினில் முத்தியுண்டாமென்றே
கானமாய் ஊதுகுழல்—கோனே
கானமாய் ஊதுகுழல்"

அருகிலே சென்று பார்த்தால், உலகப்பற்றை யெல்லாம் துறந்த மகான் ஒருவர், மரவுரியே உடை யாகவும் உடலின் தோற்—போர்வையை ஊடுருவித் தென்னிக்கொண்டு நிற்கும் எலும்புப் பூட்டுக்களே கவசமாகவும், வெயிலேயும் குளிரையும் காற்றையும் கனலேயும் மழையையும் கண்டு சிரிக்கிற ஒரு அசா தாரணப் புன்னகையே முகத்திற்கு ஒப்பற்ற ஆபரணமாகவும் விளங்கும்படியாகஅந்த மந்தையை

நடத்திக் கொண்டு செல்கிறுர். மாலை வெயிலின் மஞ்சள் நிறம் அவர் உடம்பில் படரும் போதெல்லாம் ஒரு குதி குதித்துக் கொண்டே புல்லாங்குழலை ஊதுகிறுர். அதிலிருந்து வருகிற ஒலி, இரு வினைகளையும் வென்ற ஞானியின் பேச்சைப் போல, ராகம் தாளம் என்ற மனித வரம்புகள் இரண்டையும் கடந்து அந்த இரண்டினுலும் அளக்க முடியாத விரிவும் ஆழமும் உள்ளதாய், எங்கோ மன உலகின் ஒரு எட்டாத தொலைவிலிருந்து புறப்பட்டு வரும் ஆன்ம கீதமாக இருக்கிறது! இடையிடையே அந்தப் புல்லாங்குழலை உதட்டிலிருந்து எடுத்து விட்டு, ஒரு குழந்தை சிரிப்பதைப் போன்று கபடமற்ற சிரிப்புச் சிரித்துக்கொண்டே பாடுகிறுர் அவர்!

"எனதென்றும் யான் என்றும் இல்லா திருக்கவே
தனதாக ஊதுகுழல்!—கோனே
தனதாக ஊதுகுழல்!"

இப்படிப் பாடி விட்டுத் தானே தனதான ஒரு ராகத்தில், ஒரு ஒலி—ஒழுங்கில், புல்லாங்குழலில் இருந்து அமானுஷ்யமான வேகத்தில் ஒரு கீதம் சிறகடித்துப் பறந்து வருகிறது. அது நின்றதும் மீண்டும் பாடல் :

"ஓடித் திரிவோர்க்கு உணர்வுகிட் டும்படி
சாடியே ஊதுகுழல்—கோனே
சாடியே ஊதுகுழல்!"

அடுத்த கணம் நடந்து செல்கிற ஆடு மாடுகளைச் சாடி ஓடும்படி துரத்திவிட்டு, அந்தச் சாட்டத்தில் தானும் சேர்ந்து குதித்துக் குதித்து விளையாடிக் கொண்டே சிரிக்கிறுர் அந்த ஞானி—இடைக் காட்டுச் சித்தர்.

ஆமாம். 'இடைக் காடர்' என்றும் 'இடைக் காட்டுச்சித்தர்' என்றும் வழங்கும் மகான்.சிறு பிராயத்தில் ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்டே மலைப் பக்கமாக வந்தபோது, நவ நாத சித்தர்களில்

ஒருவர் எதிர்ப்பட அவருக்குப் பால் கறந்து கொடுத்து உபசரித்து அதற்கு வெகுமதியாக ஞானப் பாலையே பருகிக் கொண்டவர்! அன்றிலிருந்து,

'மனம் எனும் மாடு அடங்கில்
தாண்டவக்கோனே! —முத்தி
வாய்த்தது என்று எண்ணேடா
தாண்டவக்கோனே!'

என்று பாடியவாறு ஆடு மாடுகளுடன் அதே பொதிகை மலைச் சாரலில் நிரந்தரமாக இருந்து விட்டார். ஜீவப் பசுக்களை மேய்த்துத் திரியும் பசுபதியான இறைவனைக் கண்டு களிக்கும் ஆனந்த அநுபவத்தில், இந்தப் பசு மந்தைகளோடு சேர்ந்து தானும் எத்தனையோ ஆண்டுகள் புல்லாங்குழலை ஊதியவாறு அந்த மலைப் பிரதேசத்திலேயே கழித்து விட்டார் அவர்! இப்பொழுதோ உலகத்தில் "கோளாறு" ஆரம்பம் ஆகிற காலம் என்று தெரிந்து கொண்டு விட்டார். எனவே, அவருடைய தீர்க்கதரிசனமான ஞானம் ஒரு வழிவகுக்க முனைந்தது!

3

நாடெங்கும் பன்னிரண்டு ஆண்டுகள் கடுமையான பஞ்சம் வர இருக்கிறது என்றும், கிரகங்கள் நூதனமான முறையில் பயங்கரமாக வக்கரிக்கின்றன என்றும், வான சாஸ்திரிகளும் சோதிடர்களும் எச்சரிக்கை செய்தார்கள். அரசாளும் மன்னரும் நிலத்தை ஆளும் வேந்தர்களும் நிலை கலங்கினர்கள். இயற்கையை எதிர்த்து நிற்கக் கூடிய வலிமை யாருக்குத்தான் உண்டு?

"சாதனங்கள் செய்தவர்கள்
சாகார் குயிலே—எல்லாத்
தத்துவங்கள் தேர்ந்தவர்கள்
வேகார் குயிலே!"

என்று மரக்கிளைகளில் உள்ள குயில்களோடு பேசிக்கொண்டே எருக்கின் இலைகளைப் பறிக்க ஆரம்பித்தார் இடைக்காடர். பறித்து அவைகளைக் கட்டுக் கட்டாக வாழை நாரினல் இறுக்கிப் பிணைத்துத் தோளிலே சுமந்து கொண்டு மலைச்சாரலிலே தமது குடிசையிலே கொண்டு கொட்டினர், அம்பாரம் அம்பாரமாகக் கொட்டினர்!

எருக்கின் இலைகளை ஆடுமாடுகள் பிரியத்தோடு தின்னவா செய்யும்? ஒவ்வொரு ஆட்டுக்கும் மாட்டுக்கும் பக்கத்திலே போய் நின்று கொண்டு புல்லாங்குழலை ஊதினர். எருக்கின் இலையை ஒவ்வொன்ருய் எடுத்து இசைக்கிறக்கத்திலே நிற்கும் ஆடுகளின் வாயிலே கிறக்கத்தோடு கிறக்கமாய்க் கொடுத்தார். பசுக்களின் பக்கத்தில் நின்று கொண்டு,

"ஒன்றைப் பிடித்தோர்க்கே—பசுவே
உண்மை வசப்படுமே!
நின்ற நிலைதனிலே—பசுவே
நேர்மை அறிவாயே!"

என்று பாடிக் கொண்டே எருக்கிலையைக் கொடுத்தார்!

நாட்பட்ட நாட்பட ஓர் இலை, இரண்டு இலை, மூன்று இலை என்ருகிச் சில தினங்களில் கொப்புக் கொப்பாகவே கொடுக்க ஆரம்பித்து விட்டார். புல்லாங்குழலும் பாட்டுமாகச் சேர்ந்து அந்த ஆடு மாடுகளுக்கு எருக்கிலையிலே ஒரு அபாரமான பிரியத்தையே உண்டாக்கி விட்டன!

## 4

கோளாருன பெரும் பஞ்சம் வந்தது. இந்த உலகத்தின் மக்களை மட்டும் அல்லாமல், வானையும் பூமியையுமே ஆட்டிவைக்கும் ஒன்பது பேர்களும், படிஅளக்கும் நவக்கிரக மூர்த்திகளும், தங்களுடைய

சாரத்திலே வக்கரித்து நின்ருர்கள். பஞ்சம் கோர தாண்டவம் ஆடியது!

நிலம் எல்லாம் தீய்ந்தது. மக்கள் பசியால் மடிந்தனர். செடி கொடிகள் எல்லாம் கருகி விழுந்தன. மரம் மட்டைகள் எல்லாம் வெயிலிலே பாளம் பாளமாக வெடித்துச் சிதறின. ஆறுகளும் குளங்களும் நீர்ச் சுனைகளும் அக்கினி வெள்ளத்தில் உருகி ஓடின. பொதிகைச் சாரலில் கான்ல் காய்ந்தது; மலையின் பாறைகளில் எல்லாம் பெரிய பெரிய வெடிப்புக்கள் விழுந்து அவற்றிலிருந்து தீப் பிடித்து எரிந்த மாதிரி வெப்பம் கொப்புளித்தது.

நவக்கிரக நாதர்கள் நிற்கும் கோசாரத்திலே வக்கரித்துக் கொண்டு பயங்கரமாகச் சிரித்தார்கள். அப்படிச் சிரிக்கும் போதே 'சட்' டென்று சூரியன் சிரிப்பை நிறுத்தினுன். எப்பொழுதும் அவனைப்பின் தொடரும் சந்திரன் இது கண்டு தானும் வாயடைத்தான். செவ்வாயோ கையிலே தாங்கிய வேலைச் சுழற்றிக் கொண்டே தீக்ஷண்யமான கண்களால் என்ன வென்று உற்றுப் பார்த்தான். ஒப்பற்ற ரூபவானுன புதன் மௌனமாக விஷயத்தை உணர்ந்தவனுய், ஸௌம்யமாக நின்ருன். தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் குருவும் இந்தத் திரிலோகத்துக்குமே புத்திமயமாக இருப்பவனுமாகிய வியாழனே, பூமியிலிருந்து வக்கரித்துக் கொண்டு நின்ற தனது பார்வையை மீண்டும் திருப்பாமல், கையை முதுகுப்புறமாகக் கொண்டு வந்து கீழே சுட்டிக் காட்டினுன். ஸர்வ சாஸ்திர ஸம்பன்னனுக விளங்கும் சுக்கிரனே என்ருல், பனியைப் போன்றும் மல்லிகையைப் போன்றும் வெண்மையான காந்தியை வீசும் தனது சரீரத்தை அசைக்காமலே சிரித்தான். ராகு தன்னுடைய பாதி உடம்பை மகா வீரியத்தோடு ஆட்டினுன். கேதுவோ ரௌத்ராகாரமாக "அட பிருகஸ்பதிகளே!" என்று சினத்தோடு பிருகஸ்பதி

உள்ளிட்ட மற்ற எட்டுப் பேரையுமே சீறினன்! சனி அப்பொழுதுதான் "என்ன விஷயம்?" என்று கேட்டுக்கொண்டே சம்மணம்போட்ட காலைச் சுடக்குப் போட்டுக் கொண்டான்!

செவ்வாய் சொன்னன்: "கீழே பூமியில் ஒரே ஒரு இடத்தில் மட்டும் நம்முடைய ஆளுகை நடக்கவில்லை. என்ன அக்கிரமம் இது!"

செவ்வாய் சுட்டிக் காட்டிய இடத்தில் இடைக்காட்டுச் சித்தர் நின்று பால் கறந்து கொண்டிருந்தார்.

"சாவாது இருந்திடப் பால்கற—சிரம்
தன்னில் இருந்திடும் பால்கற!
வேவாது இருந்திடப் பால்கற—வெறும்
வெட்ட வெளிக்குள்ளே பால்கற!"

என்று உற்சாகமாகப் பாடிக்கொண்டே எந்தக் கோடையிலும் பஞ்சப்படாத தம்முடைய எருக்கிலையை ஆடு மாடுகளின் வாயிலே கொடுத்துக் கொண்டே அவற்றின் முதுகைத் தட்டிக் கொடுத்துப் பால் கறந்து கொண்டிருந்தார்.

"புறப்படுங்கள் அங்கே!" என்ருன் கேது ரௌத்ராகாரமாக.

"புறப்படு!" என்ருன் ராகு.

"அது மட்டும் இல்லை, இப்பொழுது நாம் எந்த வரிசையில் எந்த அணிவகுப்பில் நிற்கிருேமோ அதே கிரமத்தில் செல்ல வேண்டும்!" என்ருன் வியாழன்.

"ஆமாம். அதுதான் முக்கியம். ராசி புரண்டு விடாமல்!" என்று எச்சரிக்கை செய்தான் சுக்கிரன்.

"சரி" என்று அங்குமிங்கும் இழுத்தான் புதன்.

கிரக மூர்த்திகள் ஒன்பது பேரும் அப்படியே

இடைக்காட்டுச் சித்தருடைய ஆசிரமத்துக்கு விரைந்தார்கள்!

5

"வருக! வருக! நவ நாத மூர்த்திகளே! வருக. உங்கள் வரவு நல்வரவு ஆகுக!" என்றார் சித்தர். பால் கறந்து கொண்டிருந்தவர் கைக்கலசத்தோடு எழுந்து விட்டார்!

''இருவினையாம் மாடுகளை
ஏகவிடு கோனே!
அடங்கும் மன மாடுதனை
அடக்கிவிடு கோனே!"

என்று பாடிக்கொண்டே அந்தப் பசுமாடுகளையும் ஆடுகளையும் ஓட்டி விட்டு, ஒரு கலசத்தில் பசுவின் பாலும் இன்னொரு கலசத்தில் ஆட்டின் பாலுமாக எதிர் கொண்டு உபசாரத்தோடே வந்தார்.

"இந்தக் குடிசை இன்று புனிதம் அடைந்தது. ஏதோ இந்தப் பஞ்சக்காலத்தில் என்னால் முடிந்த அதிதி மரியாதை இதுதான். உண்டு கௌரவிக்க வேண்டும்!" என்றார் இடைக் காடர்.

வேகமாக வந்த சூரியன் உபசாரத்தைக் கண்டு திகைத்தான். சந்திரனுக்கோ பால் என்றால் கொண்டாட்டம். ராகு கேதுகளுக்குச் சொல்லவே வேண்டியதில்லை. புதன் புத்திசாலி யாகையால், எப்பொழுதுமே பால் இந்த உடம்புக்கு எவ்வளவு இதமான பொருள் என்பதையும் நன்கு உணர்ந்தவன். செவ்வாய்க்கு ஆட்டின் பால் என்றால் நாக்கிலே தண்ணீர் சொட்டும். சனி வேகமாக ஒரு முடிவுக்கு வருவதில்லை. ஆனாலும் பால் சாப்பிட யார் மறுப்பார்கள்? வியாழனோ 'அதிதி மரியாதை' 'விருந்து உபசாரம்' என்றால் அதை அவமதிக்கிறதே இல்லை!

ஒன்பது பேரும் பால் பருகினார்கள். சுத்தமான பசுவின் பால். ஆரோக்கியமான ஆட்டின் பால். அதுவும் எருக்கின் இலைகளையே உட்கொண்டு சுரந்த அபூர்வமான பால்: சித்தருடைய உபசரிப்பிலே திவ்வியமாக இருந்தது அதைச் சாப்பிட!

சற்று நேரத்திலே செவ்வாய்க்குக் கொஞ்சம் சிரம பரிகாரம் செய்து கொள்ளலாம் என்று தோன்றியது. புதனுக்குப் புத்தி மயங்குவது போல இருந்தது. சனியோ உட்கார்ந்தவாறே மெதுவாகச் சாய்ந்தான். குரு மௌனமாகக் கிறங்கினான். மற்றவர்களும் அப்படியே!

ஒன்பது மூர்த்திகளுக்குமே அந்தப் பால் ஒரு வகையான கிறக்கத்தைக் கொடுத்தது. அப்படியே மயங்கிப் போய் உறங்கி விட்டார்கள்.

சித்துக்கள் விளையாடுகிற ஒரு ஞானப் பித்தனுடைய புன்னகை முகத்திலே ஓடுகிறவராய், அந்த மகான் இடைக்காட்டுச் சித்தர் மெதுவாக நடந்து வந்தார். ஒன்பது பேரும் தங்களுக்குள்ளே கிரமப் படுத்தி வக்கரித்திருந்த அந்த ராசி வகுப்பைப் பார்த்தார். அவர் முகத்தில் புன்னகை அரும்பியது. அவருடைய மனத்தினுள்ளே ஒரு வினாடி கணிதம் ஓடியது. புல்லாங்குழலை எடுத்து ஏதோ கோடு போடுபவர் போலக் காற்றிலே கீறிப் பார்த்தார். மறு விநாடி மெதுவாக அவர்களை ஒவ்வொருவராகத் தூக்கினார். தம்முடைய கணித வரம்புப் படி வேறு ஒரு ராசிக் கிரமத்திலே படுக்க வைத்தார். நகர்ந்து நின்று புல்லாங்குழலை எடுத்து ஊத ஆரம்பித்து விட்டார்!

அவ்வளவுதான் என்ன ஆயிற்று?

“மட மட’ வென்று வானத்திலே இடி இடித்தது.‘ பளீர் பளீர்’ என்று கண்ணைப் பறிக்கிற

மின்னல்கள். 'ஓ' என்று மேகத்தையே கிழித்துக் கொண்டு ஒரு காற்று. மறு கணம் 'தட தட'வென்று மழை: பிரளயாகாரமாகக் கொட்டுக் கொட்டென்று கொட்டியடித்தது!

"ஆடு மயிலே—நடம்
ஆடு மயிலே—எங்கள்
ஆதியணி சேடனைக் கண்டு
ஆடு மயிலே—நடம்
ஆடு மயிலே!"

என்று அந்த மேகத்தையும் மழையையும் பார்த்துப் பாடிக்கொண்டே ஆட ஆரம்பித்து விட்டார், இடைக்காடர்!

நவக்கிரக நாதர்கள் தங்கள் மயக்கத்திலிருந்து எழுந்தபோது ஆற்றிலே வெள்ளம் ஓடிக் கொண்டிருந்தது. சுனைகளிலே தண்ணீர் அலைவீசிக் கொண்டிருந்தது! அருவிகள் எல்லாம் 'திண் திண்' என்று விழுந்து கொண்டிருந்தன.

"என்ன அக்கிரமம்!" என்று சொல்லிக்கொண்டே எழுந்தான் செவ்வாய். "கிறக்கந்தான். ஆனாலும் எத்தனை சுகமாக இருந்தது!" என்று சொல்லிக்கொண்டே அமர்ந்தான் சுக்கிரன். போதை இன்னும் சரியாகத் தெளியாமல் உடம்பை நெளித்துக் கொடுத்தான் சனி. மற்றவர்களும் விழித்து விட்டார்கள்.

"என்ன நடந்தது?" என்று கேட்டுக்கொண்டே கவர்ச்சிகரமான புன்னகையோடு சித்தரைப் பார்த்தான் புதன்.

"விழித்திருக்கும் போது உங்கள் இஷ்டத்துக்கு நீங்கள் விளையாடுகிறீர்கள். என் இஷ்டத்திற்கு நான் விளையாட வேண்டும் என்றால் நீங்கள் அயர்ந்து தூங்குகிற சமயமாகத்தான் பார்க்க வேண்டியதிருக்கிறது."

வேறு என்ன செய்ய? உபசாரத்திலே உங்களை மயக்கிறைல்தான் நாங்கள் எங்கள் காரியத்தைச் சாதித்துக் கொள்ள முடிகிறது!'' என்ருர் சித்தர்.

சுக்கிரனும் சந்திரனும் மொதுவாகச் சிரித்தார்கள். வியாழனே சித்தரையும் அவருடைய விளையாட்டிறைல் நேர்ந்த மாறுதலையும் கண் கொட்டாமல் இமையை நன்ருக அகல விரித்து, நீண்ட நேரம் பார்த்தான். அந்தக் குரு—பார்வையில் பூமியைப் போலவே கிரக நாதர்களின் உள்ளமும் குளிர்ந்து விட்டது!

அந்தக் குளிர்ந்த தருணத்திலேயே சித்தர் அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்பினர். மறு விநாடி வேதப் பொருளை ஒலிக் கோவையிலே உரை செய்யும் அந்த அற்புதமான புல்லாங்குழலின் மாய கீதம் பொதிகைச்சாரலிலே ஒலிக்கத்தொடங்கியது. அந்த ஒலியின் இணைப்பாக ஆடு மாடுகளின் சலங்கைகள் ஒலித்தன. அந்த இன்னெலியிலே சொக்கியவாறு, மனம் என்ற வண்டின் ரீங்காரமாக அந்த மகானுடைய தெய்விகப் பாடலும் அங்கங்கே கேட்டது:

அல்லல்வினை இல்லை என்று
    தும்பீ பற—பரம
ஆனந்தம் கண்டோம் என்று
    தும்பீ பற!
தொல்லை வினை நீங்கிற் றென்று
    தும்பீ பற—பரஞ்
சோதியைக்கண் டோம் என்று
    தும்பீ பற!

# பூவும் செடியும்

அந்தக் கடிதத்தை மீண்டும் ஒரு முறை படித்துச் சொல்லும்படி கேட்டார் ராமையாத் தேவர். அவ ரால் அதை நம்பவே முடியவில்லை!

மீனாட்சிபுரம் ராமையாத் தேவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. வருகிற கடிதங்களை வேறு யாராவது "கண்" உள்ளவர்கள் தான் படித்துக் காட்ட வேண்டும்! ஆனால் திறமையோ?—அது எழுத்துக்குள்ளே தானா உட்கார்ந்து கொண்டிருக் கிறது? ராமையாத் தேவரின் மூளைக்குள்ளே இருந் தது அது.

ராமையாத் தேவர் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ள வில்லையே தவிர, பண்ணையார் வீட்டு நிர்வாகம் எல்வாம் அவரேதான்! காணி, அரைக் காணி, மா, முந்திரி, அரை முந்திரி என்று மனக் கணக்கிலே நுட்பமான கணித பின்னங்களையெல் லாம் தீர்த்துக்கட்டி விடுவார்! 'குழிப் பெருக்கல்' ஒன்றை வைத்துக் கொண்டே, 'லகர'க் கணக்கில் பெருக்கி வகுத்து மிச்சம் காட்டி விடுவார் ராமை யாத் தேவர்!

இப்படிப் பட்ட திறமை சாலியான தேவருக் குத்தான் திருவவதாரம் செய்தான், வேலய்யா— அதாவது வேலாயுதம்! சிறிதிலிருந்தே வேலியில்லா மல் வளர்ந்து விட்ட பயிர் அது!

எந்தத் தோட்டத்துக் குள்ளேயும் துணிந்து நுழைந்து விடுவான் வேலய்யா! மாங்காய் பறிக்க வேண்டுமென்றால் மாமரத்திலே போய் ஏறமாட் டான்! அந்த மாமரத்தை ஒட்டி வேலியிலே வளர்ந் திருக்குமே பூவரச மரம், அதிலேதான் ஏறுவான்.

அதில் ஏறி நின்று கொண்டே லாகவமாக மாங்காய்களைக் கணக்குப் பார்த்து விடுவான்! யாராவது கேட்டால், "பூவரச மரத்திலே குழை பறிப்பதற்கு ஏறினேன்!" என்று 'டிமிக்கி' கொடுத்து விடுவான்!

வேலய்யாவுக்குத் தகப்பனுருடைய சாமர்த்தியத்தில் பாதி இருந்தது. ஆனல் அதுஉருப்படியான பாதையில் செல்லவில்லை. விடலேகளோடு சுற்றுவதிலும், 'மைனர்' களோடு சேர்ந்து விளையாடுவதிலுமே தோய்ந்து பதினெட்டு வயதுக்குள்ளேயே பட்டம் பெற்று விட்டான், 'சண்டியன்' என்று! திருநெல்வேலி ஊரில் அவனைக் கண்டால், குழந்தைகள், ஆடவர், பெண்டிர் எல்லாருக்குமே ஒரு ஆட்டந்தான்! 'வேலய்யாவோ வாலய்யாவோ' என்று சொல்வார்கள்.

2

ஒரு நாள் கிராம முன்சீப் நெல்லையப்ப பிள்ளையவர்கள் ராமையாத் தேவரைக் கூப்பிட்டு விட்டார்.

"தேவரே, மகனை இந்த மாதிரித் தட்டி வளக்காமல் போனீரே வேய்! வெறும் படுக்காளியாயிருக்கானே வேய்!" என்று வாழைப்பழத்திலே ஊசியை இறக்கினுர்! தேவருக்கும் இது ஏற்கனவே தெரிந்த விஷயந்தான். மனம் மிகவும் கஷ்டப்பட்டது. வேலியைத் தாண்டிப் போகிற ஆடு மாடுகளைப் "பவுண்டிலே" கொண்டு அடைக்கலாம். அந்தக் காரியத்தைக் கிராம முனிசீபே செய்து விடுவார். ஆனல் இந்தப் பயலை என்ன தான் செய்வது! கட்டிவைத்து உதைக்கலாம் என்ருலோ, தேவருடைய தாட்சண்யம் ஒரு பக்கம். வேலய்யாவினுடைய கிறுதா ஒரு பக்கம். இரண்டும் மாறி மாறித் தயக்கம் காட்டின!

தேவர் அன்று வீட்டுக்கு வரும்போது, தைரியத்தைக் கொஞ்சம் வரவழைத்துக் கொண்டு

உள்ளே நுழைந்தார். எங்கோ மிக்க அவசரமாகப் புறப்படுவதற்காக, ஏதோ ஒரு பஞ்சவர்ணத் தைலத்தைத் தலையிலே தடவிக் கிராப்பைச் சீவிக் கொண்டிருந்தான் வேலய்யா? அவனுடைய சுருள் முடி சீப்புக்குப் பணியாமல் விம்மிக்கொண்டு சிதறியது! உடம்பிலே போட்டிருந்த மஸ்லின் சட்டையிலிருந்து ஏதோ ஒரு இரண்டரை அணா 'ஸெண்ட்' 'கும்'மென்று அனல்-வாசனையை வீசிக் கொண்டிருந்தது! "ஏலே!" என்றார் தேவர். பையன் ஏறிட்டுப் பார்த்தான்.

"ஏலே, ஒரே வார்த்தையிலே சொல்லிப்புட்டேன். மரியாதையா இந்தக் கிராப்பை யெல்லாம் ஒளிச்சுப்புட்டு. குடுமி வச்சுக்கிட்டு வாரதானா, இந்த வூட்டுலே மிதி. இல்லே, இந்த நிமிசமே ஒளிஞ்சிரு! ஆமா!" என்று ஆத்திரத்துடன் சொன்னார் ராமையாத் தேவர்.

"இதென்ன உங்களுக்குப் புத்தி இந்த மாதிரிப் போச்சு!"என்று இழுத்தாள்தேவருடைய சம்சாரம்.

"இந்தா மூதி! நீ இன்னமும் பேசினேண்ணா, ஒரே அடியில் ஒன் மணடையைப் பிளந்திடுவேன், சாக்ரதை! பய இனிமே வூட்டிலே மிதிச்சான், ஒன் மண்டைதான் உருளும், ஆமாம்!"

மூடி விழிக்கிற நேரத்தில் இத்தனை வார்த்தைகளும் பரிமாறின! அவ்வளவுதான்! அந்த விநாடியே அங்கிருந்து புறப்பட்ட வேலய்யாவிடமிருந்து நாளது தேதி வரை எவ்விதத் தகவலும் இல்லை. அவனுடைய ஏக்கத்திலேயே தேவர் மனைவியும் இந்த உலகிலிருந்து போய் விட்டாள். தேவரோ தாம் உண்டு, தம்முடைய வீட்டுக்குப் பின்னால் உள்ள தோட்டம் உண்டு என்று, காலத்தைக் கழிக்கலானார்!

இப்படி யிருக்கும்போது தான், இன்று, தீபாவளிக்கு முன் தினம்—இப்படி ஒரு கடிதம் வேலா

யுதத்திடமிருந்து வந்திருக்கிறது! தூக்கி வாரிப் போடாமல் என்ன செய்யும் தேவருக்கு!

"தம்பியா பிள்ளை! அப்படியானு, வேலய்யா நாளைக்கு வாரானு இங்கே!" என்று மறுபடியும் கேட்டார் தேவர்.

"ஆமா வேய்! வாராரு, உம்முடைய புத்திர பாக்கியம்! நல்ல கோடி வேட்டியா எடுத்து வையும்!" என்று சொன்னார், கிராம முன்சீப் நெல்லையப்ப பிள்ளை அவர்களின் மூத்த மகன் சிவ சுப்பிரமணிய பிள்ளை!

## 3

ஊரை விட்டுக் கிளம்பிய நிமிஷத்திலிருந்து, வேலய்யா எங்கெங்கோ சுற்றினான். ஊர் ஊராக அலைந்தான். 'சேக்காளி'களுக்கு ஒன்றும் குறைச் சலே இல்லை. 'சண்டியன்' என்ற பட்டத்துக்கு ஒரு நல்ல செல்வாக்கு இந்தக் கூட்டங்களில் இருக்கத் தான் செய்தது!

ஆனால் எத்தனை நாள் இது ஓடும்? சென்னைப் பட்டினத்தில் குடிப்பழக்கம் இருக்கிறவரை, வேலய் யாவின் பாடு கொண்டாட்டமாக இருந்தது! வெறி யர்களுக்குள் சண்டை வந்து விட்டால், இரண்டு கட்சியுமே வேலய்யாவிடம் மத்தியஸ்தம் நாடும்! எனவே, அவனுக்கு ஒரே 'கிராக்கி'யாக இருந்தது. ஆனால் எந்த நிமிஷத்தில் புண்ணியவாளர்கள் மதுவை விலக்கினார்களோ, அன்றிலிருந்து வேலய் யாவின் தொழிலுக்குப் 'பிகு' குறைந்து விட்டது. படிப்படியாகச் சாப்பாட்டுக்கே கூட 'லாட்டரி' அடிக்கவேண்டிய நிலைமையாகி விட்டது!

வயிறு பட்டினி கிடந்தால், மூளை சரியாக வேலை செய்யும் என்று சொல்லுவார்கள். வேலய்யாவுக்கு இப்பொழுது மூளை கொஞ்சம் இயங்க ஆரம்பித்தது! சென்னைப் பட்டினத்தின் எல்லையிலே வளரும்.

புதிய நகரங்கள் வழியாக அவன் ஆடி அசைந்து நடக்க ஆரம்பித்தான், வயிற்றுக்கு வழி தேடி!

அடையாற்றில் ஒரு பிரபல மனத் தத்துவப் பேராசிரியர் புதிதாக வீடு கட்டி யிருந்தார். வீட்டைச் சுற்றித் தோட்டம் பிரமாதமாக இருந்தது. இந்தத் தோட்டத்தைப் பாதுகாக்கிற வேலையாவது தனக்குக் கிடைக்காதா என்று எண்ணி, உள்ளே நுழைந்தான் வேலய்யா.

“நான் அனாதை. எனக்கு ஒருத்தரும் கிடையாது. இந்தத் தோட்டக் காவலாவது குடுங்க. ஒழுங்கா யிருப்பேன்” என்றான் வேலய்யா.

மனத் தத்துவப் பேராசிரியர் அவனை ஏற இறங்கப் பார்த்தார்!

“இந்தச் சௌடால்க் கிராப்பை எடுத்து விட வேணும். கிறுதாவை இவ்வளவு இறக்கி வைத்துக் கொள்ளக் கூடாது! இந்த இரண்டு நிபந்தனைக்கும் இஷ்டமானால், தோட்டத்தைக் கவனி!” என்றார் ஆசிரியர்.

வேலய்யா ‘சரி’ என்றான். வயிற்றுக்குள்ளே யிருந்து வந்தது அந்த வார்த்தை! உடனே வெளியே வந்தான். கிராப்பை ஒரு கணத்தில் அப்பளக் குடுமியாகக் கத்திரித்தான். கிறுதாவை எடுத்தெறிந்தான். குனிந்த தலை நிமிராமல், வேகமாகப் பங்களாவுக்குள்ளே நுழைந்தான் வேலய்யா!

## 4

தோட்டக்காரன் வேலப்யாவினிடம் பேராசிரியருக்கு நம்பிக்கை ஏற்பட்டது. மிகவும் பிரியமாகவே இருந்தார். ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் கண்டிப்பு! வேலய்யாவும் அவனோடு வேலைக்காரர்கள் பலர் இருந்தும்கூட, கலாசாலையிலிருந்து வீடு திரும்பியதும், ஆசிரியர் தாமே போய் வாளியிலே

தண்ணீர் ஏந்தி வந்து, பூஞ்செடிகளுக் கெல்லாம் ஊற்றுவார்! மாங்கன்று, மாதுளங்கன்று-இவை களுக்கு எல்லாம் தாமே பாத்தியைக் கீறி அதில் உரத்தை வைப்பார். வேலய்யா போய்த் தடுத் தாலும் அவர் கேட்கமாட்டார். மற்ற எந்த விஷயத் தில் விட்டுக் கொடுத்தாலும், இதில் மட்டும் மிகவும் கண்டிப்பு அவர்!

வேலய்யாவுக்கு இது புரியவில்லை. ஒரு நாள் ஆசிரியரிடமே நேரில் சென்று இதைக் கேட்டு விட்டான்.

"நாங்க எத்தனையோ பேரு இருக்கும்போது, நீங்க இந்த மாதிரி..."

"வேலய்யா, இந்த ஒரு வேலையிலே மட்டும் எனக்கு எவ்வளவு ஆனந்தம் இருக்கு, தெரியுமா! வருஷந்தோறும் எத்தனையோ பிள்ளைகளுக்குக் 'கல்வி' என்னும் விதையை ஊன்றி வெளியே அனுப்புகிறேன்! எத்தனையோ பிள்ளைகளை வளர்த் துப் படிக்க வைக்கிறேன்! ஆனால், எதிலேயும் இல் லாத சந்தோஷம் இதிலே இருக்கு!" என்றார் பேரா சிரியர். வேலய்யா அவருடைய வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே ஆசிரியரின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். அவர் தொடர்ந்து சொன்னார்:

"இன்று சாயந்திரம் இந்தப் பூச்செடிக்குத் தண்ணீர் ஊற்றினால், நாளைக்குக் காலையில் அது தன்னுடைய நன்றியை மலர்களாகப் பூத்து மகிழ்ச்சி யாக வெளியிடுகிறது. இந்த வருஷம் உரம் கொடுத் தால் அடுத்த வருஷம் வட்டியும் முதலுமாகச் சேர்த்து அந்தக் கடனை அடைக்கிறது மாமரம்! வாழ்க்கையில் நாம் வளர்த்துப் பாதுகாக்கிறமனிதப் பயிரைப் பற்றி எதுவும் உறுதியாகச் சொல்வதற் கில்லை. கண்ணீரையே ஊற்றி வளர்த்தாலும் விஷக் கனிகளாகவே தருகிற பிள்ளைகளும் உண்டு!"

வேலய்யாவுக்குத் தலை சுற்றியது. பேராசிரியருக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டுக் குடிசைக்குள்ளே போனவன், மறுநாட் காலையிலேதான் வந்தான். வந்து பேராசிரியர் காலிலே விழுந்தான்.

"என்னடா?" என்றார் ஆசிரியர்.

"இது வரை நான் என்னைப் பத்தி ஒரு பெரிய பொய் சொல்லிட்டேன். நான் அனதை இன்னேன். அது தப்பு. எனக்கு ஒரு அப்பா இருக்காரு ஊரிலே. இந்தத் தீவாளிச் சமயத்தில் அவரைப் போய்ப் பாக்கணும்னு ஆசையாயிருக்கு!"

இரண்டு ஜதை கோடி வேட்டிகளோடு வேலய்யாவை வழியனுப்பி வைத்தார் பேராசிரியர்.

## 5

தீபாவளி என்ற குதூகலமான பண்டிகை கோடி வஸ்திரமும் பட்டாசுகளுமாக ஜமாய்த்துக் கொண்டிருந்தது! மீனுட்சிபுரத்தின் தெரு வீதிகளெல்லாம் 'சட சடா படபடா' என்று கும்மாளம் போட்டுக் கொண்டிருந்தன! வேலய்யா நுழைந்தான்!

"அப்பா!" என்று அவன் கூப்பிட்டபோது, பதில் இல்லை. ராமைய்யாத் தேவர் தம்முடைய வீட்டுப் புற வாசலிலே இருந்த தோட்டத்தில், சுரு சுருப்பாக நின்று கொண்டிருந்தார்! சத்தம் செய்யாமல் மெதுவாக உள்ளே போய் அவருக்குப் பின்புறமாக நின்று, அவரையே பார்த்தான் வேலய்யா.

விசாலமாக இருந்த அந்தத் தோட்டத்தில் பூஞ்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்தார் அவன் தந்தை! ஆனந்தமாகச் சிரித்த அந்த வண்ண மலர்கள் தன்னுடைய தந்தைக்கு நன்றி செலுத்தினவா, அல்லது, தன்னைப் பார்த்து நகைத்தனவா என்று சிந்தித்தான் வேலய்யா!

# கண்டறியாதன கண்டேன்

“மித்திர தேவனிடமிருந்து பெறும் ஞானக் கேள்வி தொழில் செய்பவரைத் தாங்குவது; இன்பங்களை வென்று தருவது; உண்மையுடையது; ஒளிப் புதுமைகள் வாய்ந்தது. அதனை வாழ்த்து கிறோம்!”

குருதேவருடைய வார்த்தைகள் கம்பீரமாக ஒலித்தன.

“மித்திரா! விரதத்தாலே நின்னை உணர்வான் யாவன், அம்மனிதன் இன்பங்களை நன்கு நுகர்க. உன்னாலே காக்கப்படுவோன் அழிவுபெறுவதில்லை; தோல்வி அடைவதில்லை; அருகே யிருந்தும் தொலையிலிருந்தும் அவனைப் பாபம் வந்து சார்வ தில்லை.”

மித்திரன் என்ற சூரிய தேவனைப் பாடிய விசு வாமித்திர மஹரிஷியின் இந்த ரிக்குக்களைக் குரு நாதர் விளக்கம் செய்யத் தலைப்பட்டார்.

சிவசூரியனுடைய முகத்தில் இந்த ரிக்குக்களின் ஒளி பிரதிபலிக்கக் காணோம். அவனுடைய கண் களைப் பார்த்தால், அவன் இந்த உலகத்தில் சிஷ்யர் களின் மத்தியில் இருந்து, வேதத்தைக் கேட்கிற மாதிரியாகவே தெரியவில்லை. குருநாதருக்கு அது புரிந்துவிட்டது.

“சூரியா, எங்கே இருக்கிறாய்?” என்று கேட் டார்.

சிவசூரியன் எழுந்து நின்றான்.

“க்ஷமிக்கவேண்டும் ப்ரபோ!” என்று சொல்லிக் கை கூப்பினான்.

"குமாரா, என்றும் இல்லாத விதத்தில் இன்று ஏன் கலக்கத்தோடு காணுகிறாய்? என்ன நேர்ந்தது?" என்று மேலும் கேட்டார்.

"இன்று வைகறைப்பொழுதில் நதியிலிருந்து திரும்பிக்கொண்டிருந்த சமயம், நம்முடைய ஆசிரமத்துச் சோலைக்கு அருகே ஒரு காட்சி கண்டேன்."

"என்ன கண்டாய்?"

"எங்கிருந்தோ தப்பி வந்துவிட்ட இளம் மான் ஒன்று, திக்குத் திசை தெரியாமல் மருண்டு விழித்துக்கொண்டிருந்தது. நம்முடைய சோலையை அது எத்தனையோ தடவை சுற்றிச் சுற்றி வந்து களைத்திருக்க வேண்டும்."

"பிறகு என்ன நேர்ந்தது, சூரியா?"

"நான் அதைப் பிடிக்கலாம் என்று ஓடித் தொடர்வதற்குள் நம்முடைய ஆசிரமத்து வண்ண மான் தும்பை அறுத்துக்கொண்டு வெளியே ஓடி வந்தது. இரண்டுமாகச் சேர்ந்து காட்டுக்குள்ளே பாய்ந்து சென்றுவிட்டன!" என்றான் சிவசூரியன்.

"என்ன சொல்லுகிறாய்! நம்முடைய மாரஜித்தா ஓடிவிட்டான்? ஆசிரமத்தைவிட்டு வெளியே ஓடத் தெரியாதே அவனுக்கு!" என்று கேட்டான் சிஷ்யர்களில் ஒருவன்.

"அதுதான் நானும் யோசிக்கிறேன். காட்டிலே அந்தப் புதிய மானோடு எங்கெல்லாம் போய்த் திண்டாடுகிறானோ மாரஜித்! குருதேவா, அந்த விநாடியிலிருந்து என் சித்தம் ஒரு நிலையில் இல்லை!"

குருதேவர் உடனே பதில் சொல்லவில்லை. அவருடைய முகத்தில் புன்முறுவல் ஓடியது.

"சூரியா, பெண்மானுடன் ஓடிப்போன மாரஜித்தைப் பற்றிய கவலையை இந்த விநாடியே விட்டு விடு.' என்றார் அவர்.

சிவசூரியன் கலங்கி நின்றான். குருதேவர் மேலும் சொன்னார்.

"குமாரா, ஆத்ம வளர்ச்சியில் உன்னுடைய இந்தக் கலக்கம் ஒரு முக்கியமான கட்டம். இந்தக் கட்டத்திலே தான் நீ வெளி உலகுக்குச் செல்ல வேண்டும்!"

இதைக் கேட்டதும் சிவசூரியனுக்கு ஒரு கணம் உடம்பெல்லாம் அக்கினியாகத் தகித்தது. ஏதோ பேச முயன்றான். உதடு படபடத்தது. வார்த்தை வரவில்லை.

"கலங்காதே! சூரியா. ஆசிரமத்தில் இப்பொழுது தெரிந்துகொள்ளவேண்டியவற்றைத் தெரிந்துகொண்டு விட்டாய். இனி உலகத்துக்குள் செல். பிறகு ஒரு நாள் இங்கு திரும்புவாய், அப்பொழுது ஆசிரம வாசல் உனக்காகத் திறந்திருக்கும்!"

## 2

"மாதர் பிறைக் கண்ணி யானை
  மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர் சுமந் தேத்திப்
  புகுவார் அவர்பின் புகுவேன்!"

'உலக'த்துக்குள் சிவசூரியன் புகுந்தபோது, அந்தப் பாட்டல், உமா மகேசுவரர் ஆலயத்திலிருந்து சுகமாக வந்து கொண்டிருந்தது. ஆடவரும் பெண்டிரும், பல குரல் ஒரு குரலாக இசைந்து, இனிமையான காந்தாரத்தில் பாடிக் கொண்டிருந்தார்கள்.

சிவசூரியன் கோவிலுக்குள்ளே நுழைந்தான்.

சித்திரமண்டபத்தில் அடியார்களும் பிரபுக்களுமாக ஒரே கூட்டம். அரங்கத்தில் செளந்தரிய வடிவமான ஒரு கன்னி நடனம் ஆடிக் கொண்டிருந்தாள்.

'வாரமாக ஒலித்த பின்னணிக் குரல்கள் நின்றன. யாழும் குழலும் இணைந்த வாத்திய இசை, இறைவனை நாடும் இதயத்தைப் போல் பய பக்தியோடு அந்தப் பாடலைத் தொடர்ந்தது. மத்தளம்பாதத்தின் நடையைக் காட்டியது. அவள் அந்த அரங்கிலேயே ஒரு விநாடி கை கூப்பி நின்றாள். அடுத்த விநாடி,

யாதும் சுவடு படாமல்
ஐயாறு அடைகின்ற போது
காதல் மடப்பிடி யோடும்
களிறு வருவன கண்டேன்!

என்று ஒரு முறை பாடினாள். வாரமாக ஒலித்த குரல்கள் அந்த அடிகளை மீண்டும் பாடின. அப்பொழுது அவள், அரங்கிலே களிறும் பிடியும்நடந்து போவது போல அபிநயித்து, கம்பீரமாக ஒரு கோடியிலிருந்து மறு கோடிக்கு நடந்தாள். வாத்திய இசை பின் தொடர்ந்தது.

கண்டேன் அவர் திருப்பாதம்
கண்டறியாதன கண்டேன்!

என்று சொல்லி நின்றாள். சிவசூரியன் சித்திரமண்டபத்தின் ஓரத்தில் தூணிலே சாய்ந்தவாறு உட்கார்ந்து விட்டான். அவனுடைய உள்ளம் காதல் மடப்பிடியும் களிறும் நடந்து செல்வதிலே லயித்து விட்டது.

நடனக் கன்னி, அந்த அரங்கிலே பாடலின்மற்ற அடிகளை அபிநய ஓவியமாகச் சித்திரித்தாள்.

சிறையிளம் பேடையொ டாடிச்
சேவல் வருவன கண்டேன்!

என்று தலையை அசைத்தும்,

பேடை மயிலொடுங் கூடிப்
பிணைந்து வருவன கண்டேன்!

என்று ஒசிந்து ஒசிந்தும், அவள் நடன அரங்கிலே இயங்கியபோது, சிவசூரியன் இந்த உலகத்தில் இல்லை.

கருங்கலை பேடையோ டாடிக்
கலந்து வருவன கண்டேன் !

என்று குரல்கள் ஒலித்தபோது, அவள் ஆண் மானும் பெண்மானும் துள்ளி ஓடுவதுபோல அந்த அரங்கிலே துள்ளிக் குதித்தாள். அந்தக் காட்சியைக் கண்டதும் சிவசூரியனுடைய உடம்பெல்லாம் ஒரு மின்னல் துவண்டது.

3

"கண்டறியாதன கண்டேனென்று அரங்கிலிருந்து பாடினீர்கள். உண்மையில் அந்த :வார்த்தைகள் அரங்கிலிருந்து வரவில்லை. என் இதயத்தின் அந்தரங்கத்திலிருந்து வந்தன!" என்றான் சிவசூரியன், மாதங்கியைப் பார்த்து. இதற்கு முன் அவன் யாரிடமும் இந்த மாதிரிப் பேசியதே இல்லை.

"கேட்டறி யாதன கேட்கிறேன்!" என்றாள் மாதங்கி.

"சத்திரத்தில் படுத்திருந்தேன். ஆனால், இருந்ததெல்லாம் சித்திர மண்டபத்திலேதான். கண்டறியாத காட்சிகளை யெல்லாம் இமையை மூடியதும் கண்டேன்!" என்று மேலும் தொடர்ந்தான் சிவசூரியன். அவனுடைய குரலில் ராசனுபவத்தின் போதை தொனித்தது.

மாதங்கியின் வீட்டில் சேடிப் பெண்கள் வருவதும் போவதுமாக இருந்தார்கள். இது போலவே கானகச் சோலையில் மிடுக்கான இளம் மான்கள் மருண்டு மருண்டு செல்வதை அவன் கண்டதுண்டு.

ஆனால், இதுவரை எந்த மானும் பாடிக் கேட்ட தில்லை அவன். எந்த மானும் அவனோடு இவ்வளவு இனிமையான குரலில் இத்தனை வாஞ்சை மொழி களைப் பேசியதில்லை. இதுவரை இந்த மாதிரியான இன்ப அனுபவம், அவனுக்கு எந்த மான் கூட்டத் தின் மத்தியிலும் இருந்ததில்லை.

உலகமே சிவசூரியனுடைய கண்ணுக்கு ஒரு விசித்திரானந்தக் காட்சியாக விளங்கியது.

ஆமாம்; அன்று முதல் அவன் அடிக்கடி மாதங்கியின் வீட்டுக்குப் போக ஆரம்பித்தான். உலகம் சொல்லிற்று: சிவசூரியன் தங்கியிருந்த சத்திரத்திற்கும், மாதங்கி இருந்த வீட்டிற்கும் தொலை என்று. அவனால் அதை நம்ப முடியவில்லை.

மாதங்கி?—இளமையும் ஞானக் கேள்வியும் சேர்ந்து ஒரு அசாதாரணமான தேஜஸ் சிவசூரிய னிடம் பிரகாசிப்பதைக் கண்டு மாதங்கி வியந்தாள். வாரம் பாடும் பெண்களின் இசையை விட அவளுக் குச் சிவசூரியனுடைய பேச்சு இனிமையாக இருந்தது.

சிவசூரியன் நினைத்தான்:—இருவரையும் ஒரு பெரிய கானகம் பிரித்திருந்தது. இப்பொழுது காட் டைக் கடந்து விட்டோம்; கை தட்டினால் கேட்கும் என்கிறார்களே, அவ்வளவு தொலைதான் இப் பொழுது. இதையும் கடந்து விட்டால்!

புதிதாகத் தோன்றிய உணர்ச்சி, இதயங்களை இப்படி சுருதி சேர்க்க யத்தனித்துக் கொண்டிருந்த சமயத்திலேதான் மகேசுவரருடைய ஆலயத்தில் திருக் கல்யாண மகோற்சவம் வந்தது.

## 4

### ஆலயத்தில் அன்று மாதங்கியின் நடனம்.

சித்திர மண்டபத்தில் ஜன சமுத்திரம் தலைகளை அலைகளாக வீசிக்கொண்டிருந்தது. அந்தக் கூட்டத்தில் இந்தத் தடவை எங்கோ ஓர் ஓரத்தில் ஏதோ ஒரு தூணிலே சாயவில்லை சிவசூரியன். ஜனக் கடலின் கரை முகப்பிலே, எல்லோருக்கும் முன்பாக அமர்ந்திருந்தான் அவன்.

நடனம் ஆரம்பமாயிற்று. வாரம் பாடுகிற ஆடவரும் பெண்டிரும் உமையொரு பாகனை மலையான் மகளொடும் பாடித் துதித்தார்கள். மாதங்கி அரங்கிலே வந்து கை கூப்பி நின்றாள்.

காதல் மடப்பிடி யோடும்
களிறு வருவன கண்டேன்!

என்று அபிநயம் புரிந்தாள். ஆனால் ஏனோ தெரியவில்லை, சிவசூரியன் திகைப்படைந்தான்.

என்ன ஆச்சரியம்! அன்று கேட்ட அதே பாட்டுத்தான். அன்று நடனம் ஆடிய அதே மாதங்கிதான். அதே அபிநயந்தான். ஆனால் இன்று ஏன் இந்த மாறுதல்? சிவசூரியனுடைய கண்களுக்கு அன்று அதில் ஒரு தெய்வீக எழில் துலங்கியது. இன்றோ அதில் ஒரு, ஒரு, ஒரு.........அந்த "ஒரு" என்னவென்று அவனுக்கே தெரியவில்லை!

இசையில் அபஸ்வரம் என்கிறோம்; இது அப்படியில்லை. அபிநயத்தில் அபஸ்வரம் என்று உண்டா? சிவசூரியன் யோசித்தான்; மனிதர்களின் இதயத்தில் அபஸ்வரம், அந்த இதயம் விளையாடுகிற ரூப அரங்கத்தில் அபஸ்வரம் என்று உண்டா? அப்படி ஒன்றைச் சொல்லக் கூடுமானால் அந்த அபஸ்வரந்தான் இது!

அதற்குமேல் சிவசூரியன் அரங்கிலே நடந்த நடனத்தைக் காணவில்லை. ஆத்ம நிலை என்ற மலை உச்சியிலிருந்து ஒரு மென்மையான இதயம் அதல பாதாளத்தில் நழுவி விழப் பார்க்கிறது என்பதையே அவன் கண்டான்!

5

மறுநாள் விடிந்ததும் சத்திரத்திலிருந்து சிவசூரியன் மாதங்கி வீட்டிற்குச் சென்றான்.

"நேற்று நடனத்திற்குப் பிறகு அந்த மண்டபத்தில் எங்குமே உங்களைக் காணேமே, ஏன் ஒரு மாதிரி வாடியிருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் அவள், மிகவும் கவலையோடு.

"நான் இன்று கானகம் போகிறேன்!"

கார்காலத்து வானில் பயங்கரமான மின்னல் துவளுவதைக் கண்ட ஓர் இளம் மான் போல் அவள் திகைத்துப்போய் நின்றாள்.

"மாதங்கி, உன்னுடைய நடனத்தின் லக்ஷியம் மனசிலிருந்து அகல முயற்சிக்கிறது. அதைப் பார்த்த போதுதான் என் தவற்றையும் நான் உணர ஆரம்பித்தேன்" என்றான் சிவசூரியன். அவன் வார்த்தைகளில் ஒரு நிச்சயம் இருந்தது.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்!" என்றாள் மாதங்கி திகைப்பு நீங்காமல்.

"கண்டேன் அவர் திருப்பாதம் என்று ஆடிப் பாடிக்கொண்டே இறைவனை அணுகி விட உன்னால் முடியும். நாங்கள் எல்லாம் அப்படியில்லை. உடம்பை வருத்துகிறோம். உள்ளத்தைச் சாக அடிக்கிறோம். இலை காய்களைப் புசித்துக்கொண்டு, கடுமையாகத் தவங்கள் புரிகிறோம். இப்படியெல்லாம் கஷ்டப்பட்டு நாங்கள்

அடைய முயற்சிக்கிற பேரின்பத்தை நீ ஆடியும் பாடியும் எளிதில் அடைந்துவிட முடியும். அதனால் தான் சொல்கிறேன். அந்த அற்புதமான சாதனத்தில் மாசு கற்பித்து விடாதே!'' என்றான் சிவ சூரியன். அவனுடைய குரலில் ஒரு தெளிவு இருந்தது.

மாதங்கி கண்கலங்கி நின்றாள். அவளுடைய எண்ணங்களுக்குச் சொல் இல்லை.

''தெய்வம் வந்து நடனம் செய்யக்கூடிய இதய அரங்கில், ஒரு மானுடன் புகுந்துவிட்டால் என்ன கேடு நேரும் என்பதை நேற்றுக் கண்டேன். அந்தக் காட்சி என் கண்களைத் திறந்தது. இனி நான் இங்கு இருந்தால், நாம் இருவருமே நம்முடைய லக்ஷியத்தை மறந்து விடுவோம்.''

அவனுடைய வார்த்தைகளில் பொங்கிய உணர்ச்சியிலே மாதங்கி ஆழ்ந்து நின்றாள். அவன் சொன்னான்:

''மாதங்கி! நாம் இருவரும் இறைவனை நோக்கிச் செல்ல வேண்டியவர்கள். உன்னுடைய பாதை நடனப் பாதை; இசை அரங்கு. எனது பாதை கரடு முரடானது; அது கானகம். நான் அங்கேதான் செல்ல வேண்டியவன். செல்கிறேன். விடை கொடு.''

ஒரு விநாடி மாதங்கியினுடைய விழிகளில் கண்ணீர் துளித்துக் குலுங்கி நின்றது. மறு கணம் உறுதி வந்தவள் போல, சிதற நின்றநீர்த்துளியைத் துடைத்துக்கொண்டு, ''நமஸ்காரம்!'' என்றாள்.

## 6

சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தான். சிஷ்யர்களை ஒருமிக்கிற மணி நாதத்துடன் ஆசிரம வாசல் திறந்தது. சிவசூரியன் உள்ளே நுழைந்தான்.

"குமாரா!" என்ருர் குருதேவர். சிவசூரியன் அவருடைய பாத கமலங்களைக் கண்ணிலே ஒற்றிஞன்.

பூஞ்செடிகளுக்கு மத்தியில் ஒரு சல சலப்புக் கேட்டது. எல்லாரும் பார்த்தார்கள். மாரஜித் ஆசிரமச் சோலைக்குள்ளே திரும்பிக் கொண்டிருந்தான்.

"குமாரா! முதலாவது காரியமாக இன்று மாரஜித்தை ஆசிரமத்திலே சேர்ப்பாய். இனி அவன் ஓட மாட்டான்!" என்ருர் குருதேவர் புன் முறுவலுடன்.

சிவசூரியன் எழுந்து சென்று மராஜித் என்ற அந்த வண்ண மானை ஆசிரமத்தின் தறியிலே கட்டினன்.

அதே சமயம் நகரத்திலே, உமா மகேசுவரர் ஆலயத்தில், இறைவன் சந்நிதியில் மாதங்கி புத்துணர் வோடு பாடினாள்:

கண்டேன் அவர் திருப் பாதம்,
கண்டறியா தன கண்டேன்!

# காதலின் குரல்

"காதலைப் பற்றி எனக்கு என்ன தெரியும்? இதுவரை என்னை யாருமே காதலித்ததில்லை. நானாவது யாரையும் காதலிக்கலாம் என்ருலோ, காதல் புரிவதே எனக்குப் புரிவதில்லை" என்று நீலன் வேடிக்கை பேசினன்.

"காதலே அப்படித்தான். சிப்பிக்குள்ளே ஒளிந்திருக்கும் முத்துமாதிரி! இரகசியமாக இருப்பதாலே தான் நவரஸங்கள் என்ற நவரத்தினங்களில் காதல் என்னும் முத்துக்கு இத்தனை மதிப்பு!" என்று மேகநாதன் சொன்னன்.

"ஏது பெரிய கவிஞன் ஆகிவிடுவாய் போலிருக்கிறதே! தம்பி, நீ ஒரு போர் வீரன் என்பதை மறந்து விடாதே!" என்ருன் நீலன்.

இரவு மூன்ரும் ஜாமம். காவிரியாற்றின் கரையில் பராந்தகனுடைய பாசறைக்கு வெளியே ஆடம்பரமாகக் காய்ந்து கொண்டிருந்த நிலவில், போர் வீரர்கள் சிரம பரிகாரம் செய்து கொண்டிருந்தார்கள். மேகநாதன் புதிதாக ஏற்பட்ட காதல் வேகத்தினுல் கண்மூட முடியாதவனுகி, நிலவில் நடந்தான்.

"நீலா, வாஸ்தவமாகவே சொல். என்னுடைய இந்த எண்ணம் வெறும் பிரமைதானு?" என்று மறுபடியும் ஆவலோடு கேட்டான் மேகநாதன்.

"இந்தா மேகநாதா! பிரமையும் பிரேமையும் எனக்கு ஒரே வார்த்தை தான். ஆனுல் ஒன்று: அன்று உனக்கு வீரவாள் பரிசளித்தபோது சேனுதி

பதியின் மகள் உன்னையே பார்த்துக் கொண்டிருந்தது என்னவோ உண்மைதான்."

"நீலா, இப்பொழுதெல்லாம் நான்என்ன காரியமாகச் சேனதிபதியைப் பார்க்கப் போனலும் சரி, அவளும் அங்கு வந்து நின்று கொள்கிருள். அவளுடைய முகமும், அந்த நீளமான கூந்தலும், கண்களிலே உள்ள ஒளியும்...அம்பு பாய்வது போல அல்லவா இருக்கிறது! ஆனலும் இந்த அம்பு பாயும் போது எத்தனை இன்பமாக இருக்கிறது!" என்று வியப்பிலே சொக்கியவாறு மேகநாதன் பேசினன்.

"மேகநாதா, உன்னுடைய காதல் வேகத்தைப் பார்த்தால் நீ பெரிய கவி ஆகிவிடுவாய் என்று வாஸ்தவமாகவே பயமா யிருக்கிறது!" என்ருன் நீலன்.

மேகநாதன் அங்கிருந்து புறப்பட்டான். வணக்கம் செய்வதற்கு உயர்த்திய கையை மறித்துக் கொண்டே, "ஒரு விஷயம் தெரியுமா?" என்று நீலன் கேட்டான்.

"எதைச் சொல்கிருய்?"

"நாளைக்குப் பௌர்ணமி இரவில்......

"அடேயப்பா! இதைத்தான புதிதாகச் சொல்ல வந்து விட்டாய்! ஒவ்வொரு பௌர்ணமியும நடப்பது தானே?" என்று சொல்லிவிட்டு, மேகநாதன் மேலே நடந்தான்.

## 2

'எப்பொழுதும் சண்டையிலும் பயிற்சியிலும் நேரத்தைக் கழிக்கிறவர்களுக்குக் களியாட்டங்கள் மிக மிக அவசியம். இல்லையென்ருல் இதயம் என்ற தத்துவத்தையே மறந்து விடுவார்கள்'—இது சேனதிபதியின் கொள்கை.

ஒவ்வொரு பௌர்ணமியிலும் சேனாதிபதி நிலா விருந்து ஏற்பாடு செய்வதுண்டு. காவிரியின் மணற் பரப்பில், பூர்ண சந்திரன் பரிமாறுகிற நிலவுவிருந்திலே சேனாதிபதி நவநவமான உணவு விருந்து அளிப்பார். அதோடு மட்டுமல்ல; ஒவ்வொரு விருந்திலும் ஒரோரு புதிய புதிர் விளையாட்டும் நடக்கும்.

அவருடைய மனைவி கேட்டாள்: "போர் வீரருடைய இதயத்தில் வீரம் என்ற உணர்ச்சிக்குத் தானே இடம் உண்டு? மற்ற உணர்ச்சிகள் அந்த இதயத்தில் புகுந்தால், கடமையை மறந்துவிட மாட்டார்களா?"

அந்தக் கேள்விக்கு அவர் என்ன பதில் சொல்லப் போகிறார் என்பதை ஆவலோடு கவனித்தாள் அவருடைய மகள் வனிதை.

"ஒரு உணர்ச்சியிலிருந்து இன்னொரு உணர்ச்சிக்குச் சென்று மீள்வதுதான் இதயத்துக்கு ஒரு ஓய்வு. இல்லாவிட்டால் மனிதன் பைத்தியம் ஆகிவிடுவான். இதய தத்துவம் மிக்க அதிசயமானது. அது உங்களுக்கெல்லாம் புரியாது" என்றார் சேனாதிபதி.

"தத்துவம் புரியாவிட்டாலும் ஒரு விஷயம் பார்த்திருக்கிறேன், அப்பா. போர் செய்யும் வீரர்களிடம் வேறு என்ன திறமைகள் எல்லாம் ஒளிந்து கிடக்கின்றன என்பது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது!" என்றாள் வனிதை, ஆற்று மணலைக் கிளறிக் கொண்டே.

"குமாரி, மனிதனுடைய திறமைகள் எல்லாம் இதோ பார், இந்த மணலுக்குள்ளே மறைந்துகிடக்கும் ஊற்றுப் போல். மேல் எழுந்தவாறாகப் பார்க்கும் போது, வெறும் மணல்தான்!"

பேசிக் கொண்டே காவிரி மணலில் நெடுந் தூரம் நடந்து விட்டார்கள் மூவரும்.

"நாளைக்கு என்ன புதிர் போடப்போகிறீர்கள் அப்பா?" என்று வனிதை கேட்டாள், திரும்பிக் கொண்டே.

"ஒரு மிகப் புதிய விளையாட்டு!"

"என்னிடம் சொல்லலாம் அல்லவா? நான் தான் போட்டியில் கலந்துகொள்ளப் போவதில்லையே!"

"அப்படி ஒதுங்கிவிட முடியாது. போட்டியில் முடிவு சொல்ல வேண்டியவள் நீதான்!" என்று சேனாதிபதி தீர்மானத்தோடு சொன்னார்.

"அந்த மாதிரி என்ன புதிர்?"

"ஏதாவது ஒரு கேள்வி கேட்க வேண்டும். அதற்கு விடை பாட்டாகச் சொல்லவேண்டும் வீரர் கள்!"

"பாட்டா! கவியா!"

"ஆமாம்" என்றார் சேனாதிபதி.

3

நிலாவிருந்து நேர்த்தியாக நடைபெற்றது. ஆற்று மணலும், பௌர்ணமி நிலவும், காவிரித் தண் ணீரும் சேர்ந்து, அந்தக் களிப்பைச் சோபிக்கச் செய் தன. ஆனால் விருந்தின் முடிவில் இவ்வளவு பெரிய வியப்பான பாணம் விழும் என்று மேகநாதன் எதிர் பார்க்கவில்லை. அவன் நினைத்தான், கண்கள் இரண் டையும் துணியினால் கட்டிவிட்டு வாள்போர் செய் யச் சொல்லுவார்; அல்லது காவிரித் தண்ணீரில் அந்த நிலா வெளிச்சத்தில் முக்குளி பாய நேரிடும் என்று. கவிபாட வேண்டிய சங்கடம் வரும் எனக் கனவிலும்கூட அவன் எதிர்பார்க்க வில்லை! தன்னை

'ஒரு கவிஞனாகஆய்விடுவாய்' என்று நீலன் கேலி செய்தானே, தான் மட்டும் இதற்குள் அப்படி ஒரு கவிஞன் ஆகியிருந்தால் இப்பொழுது எவ்வளவு உதவியாக இருந்திருக்கும்?

அவமானம் தாங்க முடியாமல் போனதற்குக் காரணம் அந்தப் போட்டியின் விவரத்தைச் சேனாதிபதியின் மகள் வனிதையே தன் அமுத மொழிகளால், அவ்வளவு பெரிய கூட்டத்தில் அறிவித்தது தான்.

வீரர்கள் எல்லாரும் தங்களுக்குக் கவி பாடத் தெரியாது எனச் சொல்லி விடுவார்கள் என்றே மேகநாதன் எதிர்பார்த்தான். ஆனால் ஒருவருமே அப்படிச் சொல்லக் காணோம். அவர்களுடையமுகங்களைப் பார்த்தால் ஒவ்வொரு வீரனும் அந்தப் போட்டியில் கலந்துகொண்டு வெற்றி பெறுவதற்குத் துடிப்பது போலத் தெரிந்தது. ஒரு பெண்ணின் அறிவிப்புக்கு ஆடவர்கள் மத்தியில் எவ்வளவு வலிமை இருக்கிறது என்பதை அப்பொழுதுதான் உணர்ந்தான் அவன்.

போட்டி ஆரம்பமாயிற்று.

காவிரியில் கரையும் பனிக்கட்டியைப்போல ஒரு விநாடியில் அந்தக் கூட்டத்திலிருந்து மறைந்தான் மேகநாதன்.

## 4

மணற்பரப்பில் எங்கோ ஒரு ஓரத்தில் ஒதுங்கிப் போய் உட்கார்ந்து விட்டான் அவன். அவ்வளவு பெரிய கூட்டத்தில் தான் உள்ளன்போடு காதலிக்கும் வனிதையின் கண் முன்பு, அசட்டுப் பட்டம் கட்டிக்கொள்ள அவன் மனம் ஒப்பவில்லை. அதே சமயம் மற்ற வீரர்கள் ஏதோ சொல்லுவதும், வனிதை சிரிப்பதும் தூரத்திலே கேட்டுக்கொண்டேயிருந்தது. அவன் நினைத்தான்; "போர் வீரர்கள்கவி

பாடுகிறார்கள், அவர்களுடைய கவித் திறமையில் உள்ளம் மகிழ்ந்து வனிதை சிரிக்கிறாள். அதே சமயம் தன்னுடைய பேதமையை, பயங்கொள்ளித் தனத்தை எண்ணி நகைக்கிறாள். நகையாடுகிறாள்!''

''சிரி...... வனிதையே. சிரி...மேகநாதனுடைய பேதைமைக்காகச் சிரி'' என்று சொல்லிக்கொண்டே மேகநாதன் தனக்குள்ளே சிரித்தான். வார்த்தைகளில் பொங்க வேண்டிய உணர்ச்சிகள் எல்லாம் சொல்லற்று மயங்கி அவனுடைய மூளையைக் குழப்பின. கண் சுற்ற ஆரம்பித்தது. ஆற்று மணலில் நிலவின் ஒளியில் சாய்ந்து விட்டான் அவன்.

''மேகநாதா!'' என்று ஒரு மெல்லிய இனிய குரல் கேட்டது. பார்த்தான்; யாரையும் காணோம். திகைப்பதற்கு முன் மீண்டும் அந்தக் குரல்; அதில் ஒரு சோகம்.

ஆனால் அந்தச் சோகத்திலே விவரிக்க முடியாத ஒரு கவர்ச்சி. இன்பமும் துன்பமும் கலந்து இணைந்த ஒரு ஆனந்த ஏக்கம் அதில் ஒலித்தது. என்ன ஆச்சரியம்! காதலில் மறுகும் மனித உள்ளத்தின் உணர்ச்சிகள் எல்லாம் ஒருமித்துத் தண்ணீரின் மேல் பரப்பிலே மிதந்து மிதந்து வந்து காதிலே ஒலித்தால் எப்படியிருக்கும்? அப்படியிருந்தது அந்தக் குழைமையான குரல். மானச உலகிலிருந்து இறங்கி வந்து மாந்தர்களின் மொழியில் உரையாடும் காவியக் கன்னி மீண்டும் பேசினாள்.

''மேகநாதா, ஏன் உறங்குகிறாய்—எழுந்திரு!'' என்றாள்.

மேகநாதன் திகைத்தான்: ''நீ யார்? எங்கிருந்து பேசுகிறாய்?'' என்று கேட்டான்.

''ஏன் ஒதுங்கி வந்துவிட்டாய்? முகம் எல்லாம் ஏன் இப்படி வெளுத்திருக்கிறது?'' என்று அவள் கேட்டாள்.

மேகநாதன் பதில் சொன்னான்: "என் முகம் ஏன் வெளுக்காது? அறிவற்ற பேதைக்கு வேறு எப்படி யிருக்கும் முகம்?"

"எழுந்திரு, மேகநாதா! எழுந்து ஒரு பாட்டுப் பாடு" என்றாள் அவள்.

"பாட்டுப் பாடவா? நானா? மேகநாதனா? எனக்குப் பாடத் தெரிந்திருந்தால் நான் ஏன் இங்கு ஓடி வந்திருக்க வேண்டும்?"

"இல்லை. உனக்குப் பாடத் தெரியும். அதைச் சொல்லவே வந்தேன். ஆமாம்; பாடு, கேட்கலாம்."

"இல்லை. பாடத் தெரியாது. அதோ என்னைக் கேலி செய்கிற வனிதையின் சிரிப்பொலி—என்ன! சிரிப் பொலி கேட்கவில்லையே; இத்தனை நேரம் கேட்டுக் கொண்டிருந்ததே. நின்று விட்டதா? இல்லை. நான்தான் உறங்குகிறேனா? என் எதிரே ஒருவரையும் காணேமே. நீ எங்கிருக்கிறாய்?"

"மேகநாதா, நான் இங்குதான் இருக்கிறேன். காதல் என்ற இன்பக் கனவில் இதயம் உருகும் பொழுது நான் தோன்றுகிறேன். சொல்லே எனது வடிவம்; உணர்ச்சியே எனது ஜீவன்—எங்கே, ஒரு பாட்டுப் பாடு."

நிலவிலிருந்து ஒரு கீற்று இறங்கி வந்து உடம்பிலே சென்றால் எப்படி யிருக்குமோ அப்படி யிருந்தது மேகநாதனுக்கு. அவன் எழுந்து உட்கார்ந்தான்.

"பாடுகிறேன். ஆனால் எதைப் பாட? எப்படிப் பாட?"

"பாடு. இந்த நிலவைப் பாடு. இந்த நதியைப் பாடு. இந்த நீலவானத்தையும், அது குடை கவிழ்த்து நிற்கிறதே உலகம், இந்த உலகத்தையும்

பாடு. காவிரியின் பூம்புனல், வெள்ளி மணல், சுகமான காற்று, எல்லாவற்றையும் பாடு.''

காதல் என்ற இன்ப வேதனையில், அதன் இங்கித ஏக்கத்தில் லயித்த மேகநாதனுக்கு இது வரை அநுபவித்திராத ஒரு மனோலயம் ஏற்பட்டது. அவன் சொன்ன வார்த்தைகள்: ''பாடுகிறேன். இந்தப் பிரபஞ்சத்தை யெல்லாம் பாடுகிறேன். என் னுடைய ஏக்கத்தை எல்லாம் சொல்லிலே தேக்கு கிறேன். ஆமாம்; ஊமையாக இருந்த எனக்குக் குரல் தந்தாய். மனித உள்ளத்தின் இன்பவேதனை நீ. உலக மகா காவியங்களின் அன்னையாகிய உன் சந்நிதியில் பாடுகிறேன்.''

மேகநாதன் அந்த இடத்திலிருந்து எழுந்தான்.

## 5

''கந்தர்வ உபாதி'' என்று சொல்கிறார்களே, அந்த மாதிரி ஒரு ஜுரத்தின் வேகத்தில் கண் இமைகள் மூடியும் திறந்தும் அவன் நடந்தான். கண நேரத்தில் விருந்துக் கூட்டத்துக்குள்ளே பாய்ந் தான். அப்பொழுது அங்கே கேள்வி நடந்து கொண் டிருந்தது:

''துன்பமே இல்லாததும், தோற்றவர் வென்ற வர் இருவருமே மகிழக் கூடியதுமான ஒரு வெற்றி எது?'' என்று போர் வீரர்களைக் கேட்டுக் கொண் டிருந்தார் சேனாதிபதி.

அந்தக் கேள்விக்கு விடை தெரியாமல் வீரர்கள் அனைவரும் திகைத்துப் போய் நின்ற தருணத்தில் மேகநாதனின் குரல் தூரத்திலிருந்து வந்தது:—

இன்ப நங்கையின் முகங்கண்டு—அவள்
இனிய கண்களின் எழில்உண்டு
துன்பம் போன்றதோர் இன்பத்தில்—அவட்குத்
தோற்றுத் திளைத்தல் வெற்றியம்மா—அது
தோல்வியே எனினும் வெற்றியம்மா!

அன்று கேலி செய்த நீலன் இன்று உண்மையி லேயே மேகநாதனுடைய கன்னிக் கவிதையில் சொக்கிப் போய்ப் பேசினான்:

"நிலவினிலே மலரும் அல்லியைப் போல, காதல் என்ற சந்திர ஒளியில் இதயத் தடாகத்திலே அபூர்வமான மலர்கள் மலர்கின்றன!" என்றான்.

"இதயதத்துவம் அதிசயமானது என்று அன்று சொன்னீர்கள், அப்பா. அது எனக்கு இப்பொழுது தான் விளக்கமாகப் புரிகிறது" என்றாள் வனிதை.

சேனாதிபதி மகிழ்ச்சியோடு அந்த வார்த் தையை ஆமோதித்தார். "இதயத்துக்குக் குரல் உண்டு. அது கனவிலே கேட்கும்; கவிதைகள் பேசும்!" என்றார் அவர்.

# யாத்திரை

காலம் என்ற பாதையில் அந்த ஐந்து பேரும் நடந்து சென்றார்கள்—காலம் என்ற பாதையில்.

ஐவரில் ஒருவன் பெயர் வானம். அடுத்தவன் காற்று. மூன்றாமவன் நெருப்பு. நான்காவது யாத்ரிகன் தண்ணீர். ஐந்தாவது உலகம்.

முடிவற்று வளைந்து வளைந்து செல்லும் காலம் என்ற தொலை வழியிலே இந்த ஐந்து நண்பர்களும் நடந்து சென்றார்கள்.

இந்த ஐவருக்கும் தெரியாமல் ஒரு ஆறாவது பேர்வழி இவர்களை அழைத்துச் சென்று கொண்டிருந்தான். அவனுக்குப் பெயர் நியதி.

காலப்பாதையில் அங்கங்கே தொலைக் கற்கள் நின்றன. முப்பது சிறு கல் தாண்டியதும் ஒரு பெருங்கல்; அப்படிப் பன்னிரண்டு பெருங்கல் தாண்டியதும் ஒரு உயரமான பெருங்கல். நாட்கள் என்றும் மாதங்கள் என்றும் வருஷங்கள் என்றும் உலகோர் இவற்றை அழைப்பதுண்டு.

யாத்திரை முடிவற்றுச் சென்றுகொண்டிருந்தது. யாத்திரிகர்களுக்கோ கால்கடுக்க ஆரம்பித்தது. "ஏது இந்தப் பாதை முடிவற்றுப் போய்க் கொண்டிருக்கிறதே" என்று மெதுவாக முணு முணுக்க ஆரம்பித்தான் உலகம் என்ற யாத்ரிகன்! அவனுக்கு வெகு சீக்கிரத்தில் அலுப்பு உண்டாகி விடும் போலும்! காலைத் தேய்க்க ஆரம்பித்தான்.

உலகம் காலைத் தேய்த்தாலும் மற்ற நான்கு பேரும் அதை லக்ஷியம் செய்ததாகத் தெரியவில்லை. மேலே நடக்க ஆரம்பித்தார்கள்.

"விதி! விதி!" என்று சொல்லிக் கொண்டே உலகமும் அவர்களைத் தொடர்ந்தான்.

கண்ணுக்குப் புலப்படாமல் இவர்களை அழைத்துச் செல்லும் நியதி இருக்கிறானே, அவன் அருவமாக நின்று கொண்டு இதைப் பார்த்துப் புன்முறுவல் செய்தான்!

இதோ ஒரு பெருங்கல். ஐந்து பேரிலே இன்னொருவன் 'தாகம் எடுக்கிறது!' என்றான். அவன் தான் தண்ணீர்! உலகத்துக்குச் சிரிப்பு வந்தது! "நண்பன் தண்ணீரா! உனக்குத் தாகம் எடுக்கிறதா! சபாஷ்!" என்று சொல்லிக் கொண்டே உலகம், தண்ணீரின் முதுகைக் தட்டிக் கொடுத்தான்! தன்னுடைய கட்சிக்கு ஒரு ஆள் சேர்ந்து விட்டதில் உலகத்துக்கு அபாரமான திருப்தி!

இந்தச் சந்தர்ப்பத்திலேதான் அந்தப் பொல்லாத நெருப்பு, முகத்தைத் திருப்பி இவர்கள் இருவரையும் ஒரு பார்வை பார்த்தான். அவ்வளவு தான்! "விதி! விதி!" என்று சொல்லிக் கொண்டே மேலே நடக்க ஆரம்பித்தார்கள், உலகமும் தண்ணீரும் கைகோத்துக் கொண்டே!

ஆறாவது பேர்வழியான உருவம் இல்லாத நியதியோ, மேலும் புன்முறுவல் புரிந்தான். யாத்திரை மேலும் தொடர்ந்தது.

காலப் பாதையிலே நடந்துசென்ற ஐவருக்கும் படிப் படியாக உலகத்தைப் பிடித்த அதே நோய் தொத்திக் கொண்டது! நெருப்பு சொன்னான்: "களைப்புத் தாங்க முடியவில்லை. மேலெல்லாம் வியர்க்கிறது எனக்கு!"

இன்னும் கொஞ்ச தூரம் சென்றதும் காற்று "எனக்குக் கால் கடுக்கிறது. நகர முடியாது!" என்றான். அடுத்த கல் செல்வதற்குள் வானம், "எனக்குக் கண் சுற்றுகிறது. கரு கரு என்று மயக்கமாய் வருகிறது!" என்று உட்கார்ந்து விட்டான்.

உலகத்துக்குக் கோபம் வந்தது "யாரடா பைத்தியம். இந்தக் கண்மூடித்தனமான பாதை யிலே நம்மை அழைத்துப் போவது?" என்று சீறினான்.

தண்ணீர் சொன்னான்: "எனக்கு அப்பொழுதே தெரியும். இந்த மாதிரிச் சண்டை பிடிப்பாய்என்று! இந்த நெருப்புத்தான் என்னை முழித்துப் பயங் காட்டினான்!"

நெருப்புக்குக் கோபம் வந்துவிட்டது. "நானும் நிற்கத்தான் போனேன். காற்று இருக்கிறானே, அவன்தான், என்னை அமரவிடாமல் தூண்டி விட்டான்!" என்றான்.

காற்றுக்கு மட்டும் இதைக் கேட்டுக் கொண்டு பொறுமையாக இருக்க முடியுமா! சொன்னான்: "நான் என்ன செய்வேன்! இந்த வானம் இருக் கிறானே, அவன்தான், என்னை அமுக்கித் தள்ளு கிறானே! பேச்சு மூச்சுக்கு இடம் ஏது எனக்கு!"

வானம் இந்த நான்கு பேரையும் பரிதாபமாகப் பார்த்தான்; சொல்லுவான்.

"நண்பர்களே, உண்மையிலே நாம் எங்கே போகிறோம் என்ற விஷயம் எனக்கே தெரியாது!"

இவ்வாறு வானம் மேகக் குரலிலே சொல்லி விட்டு இடி இடி என்று சிரித்தான்.

உலகத்திற்கு இப்பொழுது பிடி கிடைத்து விட்டது.

"அப்படியானல் நண்பர்களே! உள்ளங்கால் வெள்ளெலும்பு தேய, நாம் ஏன் இப்படி வெள்ளங் காலம் நடக்கிறோம்?" என்று கேட்ட வண்ணம் தன்னுடைய வழுக்கை மண்டையிலே ஒரு குட்டுக் குட்டிக் கொண்டான் உலகம்.

இந்த ஐவரையும் அருவமாக, அவர்களுக்கே தெரியாமல் நின்று அழைத்துச் செல்லும் நியதி மௌனமாகப் புன்புறுவல் பூத்தான்.

தான் கேட்ட கேள்விக்கு யாரும் பதில் சொல்லாமற் போகவே, உலகத்திற்கு ஆவேசம் வந்தது.

"நாம் எங்கு செல்கிறோம் என்று உனக்கா தெரியாது!" என்றான் தண்ணீரைப் பார்த்து. தண்ணீருக்கு ஆவேசம் வந்தது. "உனக்கா தெரியாது!" என்றான் நெருப்பைப் பார்த்து. நெருப்போ காற்றைப் பார்த்துக் கேட்டான், "உனக்கா தெரியாது!" என்று. காற்று வானத்தின் மீது பாய்ந்தான்: வானம் கையை விரித்து நால்வரையும் அமர்த்தினான்! புன்சிரிப்புடன் இருந்த நியதியோ, இந்த வேடிக்கையைப் பார்த்து உற்சாகத்தை அடக்க முடியாமல் உரக்கச் சிரித்தான்.

வானம் பலமாக அமுக்கினல் காற்று நசுங்கி விடுவான். காற்று விம்மி அடித்தால் வானம் பொடி பொடியாக வேண்டியதுதான். தீ வேகமாக எரிந்தாலோ தண்ணீர் ஆவியாகிவிட வேண்டும்! தண்ணீர் பெருகிப் பாய்ந்தாலோ, தீ அணைய வேண்டியதுதான்! அப்படியிருக்கும்போது, இந்த ஐவரும் யுத்தத்திலே கை கலந்தால் முடிவு ஏது? பாவம், கீழே விழுந்து கிடக்கும் உலகத்தை மிதித்துக் கொண்டே, நண்பர்கள் நாலுபேரும் முடிவு காண முடியாத யுத்தத்திலே இறங்கி விட்டார்களே என்றுதான், அப்படிச் சிரித்தான் நியதி!

நாலு பேருடைய கால் மிதியிலும் துவைந்து கொண்டிருந்த உலகம் ஆறுவது குரல் சிரிப்பதைக் கேட்டுத் திடுக்கிட்டான். அதே சமயம் மற்ற நால்வரும் கைகளைச் சற்றுத் தளர்த்தினார்கள்.

"யார் அது சிரிப்பது?" என்று கேட்டான் உலகம். "யார் அது சிரிப்பது?" என்றான் நெருப்பு. தண்ணீர், காற்று, வானம் மூவரும் அதையே கேட்டார்கள்.

"நான்தான் ஆறுவது பேர்வழி!" என்றான் நியதி.

"என்ன, ஆறுவது பேர்வழியா! நீ ஒருவன் இருக்கிறாயா! கண்ணுக்குத் தெரியவே இல்லையே!" என்றான் உலகம்.

மற்ற நால்வரும் கண்ணைத் துடைத்துகொண்டு பார்த்தார்கள்.

"ஆமாம், நான் ஒருவன் இருக்கிறேன். காலப் பாதையில் உங்களுக்கு வழி அமைத்துக் கொண்டு செல்கிறேன்!" என்றான் அவன்.

அடுத்த வினாடி ஐந்து பேரும் எழுந்து நின்றார்கள், ஆத்திரத்தோடு!

"அப்படியானால், உனக்கு வழி காட்டுவது யார்?" என்றார்கள் ஐவரும் ஏக காலத்தில்.

"நண்பர்களே! அன்பெனும் வானம், அன்பெனும் காற்று, அன்பெனும் கனல், அன்பெனும் புனல், அன்பெனும் உலகம், என்று ஐந்து விதமாகவும் வர்ணிக்கப்படும் சக்தி ஒன்று உண்டு. நியதியாகிய எனக்கும் நியதி அதுதான்!" என்றான் அந்த ஆறுவது நண்பன்!

"அப்படியானால்........?" என்று வழக்கை மண்

டையைக் கையால் துடைத்துக் கொண்டே எழுந்தான் உலகம்.

"நாம் நடப்பது என்பது இல்லை. நம்மை நடத்துகிறது என்றுதான் ஒன்று உண்டு. அப்படியிருக்கும்போது நமக்கு ஏது களைப்பு! நம்மை இழுத்துச் சுமக்கிற சக்திக்கே இல்லையே அது!" என்றான் நியதி—

"அப்படியானல் புறப்படுங்கள்!" என்றான் வானம்.

களைப்பு தீர்ந்தது! சண்டை நின்றது! அன்பு பிறந்தது!

காலம் என்ற பாதையிலே, அன்பு என்ற தளையில் கட்டுண்டு, ஐந்து யாத்ரிகர்களும் நடந்தார்கள்; நடக்கிறார்கள்; நடந்துகொண்டே யிருப்பார்கள்!

# கல்லும் சொல்லும்

"கல்லைவிடச் சொல்தான் வலிமையானது" என்றான், மீண்டும் மீண்டும், பரஞ்சோதி, அயன் அந்த வார்த்தையை ஒப்புக் கொள்ளவில்லை!

நிலவுத் தீவின் உபவனத்தில் கீதம் இசைக்கின்ற இனிய புள்ளினங்களின் ஒலியையும் மீறி, ஆவேசத்தோடு வந்து கொண்டிருந்தது அந்த விவாதம். இடையிடையே விவாதம் செய்கிறவரின் வாக்கியங்களுக்கு, அரைப்புள்ளி கால் புள்ளி என்று வரிகளுக்கு வேகத்தை வகுத்து ஓட விடுவதுபோல, ஒரு சிரிப்பு அங்கங்கே ஒலித்துக் கொண்டிருந்தது. அந்த வண்ணச் சிரிப்பு விவாதத்துக்கு முற்றுப் புள்ளியை மட்டும் வைப்பதாக இல்லை! ஓடவிட்டுக் கொண்டே ஒலித்தது.

நிலவுத் தீவின் உபவனத்தில் சிற்பி அயனும், கவிஞன் பரஞ்சோதியும் பலமான விவாதத்தில் முனைந்திருந்தார்கள். அந்த விவாதத்தைச் சிரிப் போடு அநுபவித்தவாறு மல்லிகைத் திட்டில் அமர்ந் திருந்தாள் முத்து மேகலை.

"கல்தான் வலிமை யுடையது. அதற்குள்ள சிறப்பு சொல்லுக்கு இல்லவே இல்லை!" என்று தீர் மானத்தோடு சொன்னான் அயன். அந்தச் சிற்பியி னுடைய வார்த்தைகள் உளியிலிருந்து சிதறுகிற கற்சில்லுகளைப் போல வேகத்தோடு தெறித்தன.

"கல் காற்று மழைக்குப் பலக்காது. காலம் அதை மழுக்கும். மனிதர்கள் அதை அழிப்பார்கள். சொல் அப்படியில்லை. நாவினோடும் மனத்தினோடும் ஒட்டியது அது. மொழி உள்ளவரை, மக்கள் ஒரு

வருக்கொருவர் பேசிக் கொண்டிருக்கும் வரை, சொல் நிலைத்து நிற்கும்!'' என்றான் கவிஞன் பரஞ்சோதி. ஆழமான கசத்தில் தண்ணீர் சுழித்துச் சுழலுவதைப் போல அந்த வார்த்தைகள் சுழன்றன.

முத்துமேகலை இந்த ரசமான விவாதத்தை மகிழ்ச்சி பொங்கும் முகத்தோடு சற்றுத் தொலைவிலிருந்தே கேட்டுக்கொண்டிருந்தாள்! இவர்களுக்கு எதிரில் மல்லிகைக் கொடிக்கு அருகே நின்ற சிறு மேடையில் அமர்ந்து, விவாதத்தின் முடிவைப்பற்றி லக்ஷியம் செய்யாமல் கருத்தின் ஓட்டத்தில் மனத்தைச் செல்லவிட்டு மௌனமாக அநுபவித்துக் கொண்டிருந்தான், கமலக்கண்ணன். அவன் ஒரு ரசிகன்!

''கல்லுக்கு நீளம், அகலம், உயரம் என்று மூன்று அளவைகள் உண்டு. சிற்பக்கலை இந்த மூன்றையும் கிளைகளாகப் பற்றிப் படர்ந்து மலர்கிறது!'' என்று சொன்னான் சிற்பி அயன்.

''ஆமாம்; அப்படி மூன்று எல்லைகள் அதற்கு இருப்பதினால்தான் சொல்கிறேன், அது எல்லைக்குள்—நீளம், அகலம் உயரம் என்ற எல்லைக்குள்—அடங்கியது! சொல்லோ அப்படியில்லை. அதற்கு எல்லை கிடையாது. மனித மனந்தான் அது படரும் கொம்பு. மனித மனத்தின் விரிவுதான் அதன் வியாபகம். அது இந்தப் பிரபஞ்சத்தைவிட விசாலமானது. உருவமற்ற உணர்வின் வடிவிலே நித்தியமாக நிற்க வல்லது கவிதை. முத்து மேகலை இதை உணர்ந்திருக்கிறாள்!'' என்றான் பரஞ்சோதி.

பூ மொட்டு மலர்வதைப் போல, அவளுடைய முகத்தில் நகை மலர்ந்தது.

சிற்பி சொன்னான்: ''இல்லை; முத்துமேகலைக்குச் சிற்பத்தின் வலிமையிலேதான் நம்பிக்கை. இந்தச்

சோலை முழுதும் இன்னும் ஓர் இரவில் அவளுடைய சிலைகளாக நிறுத்துவேன். அப்பொழுது அவள் சிற்பத்தின் வலிமையை நிதர்சனமாக உணர்வாள்''

விவாதத்தின் இந்த நயமான இடத்தில் மனத்தை அமர்த்தி, சிந்தனையை நகைப்பிலே சிதறினன் பரம ரசிகஞன கமலக் கண்ணன்.

''சிரிக்காதே. நீதான் வாய் திறந்துசொல்லேன்; எது வலிமையானது, கல்லா அல்லது சொல்லா?'' என்று கேட்டான் அயன்.

''எது வலிமையானது என்பதைப் பற்றி எனக்குக் கவலையே இல்லை. இரண்டுமே அநுபவிப்பதற்கு இன்பமாக இருக்கின்றன. அவ்வளவுதான் எனக்குத் தெரியும். அநுபவம் சம்பந்தப்பட்ட மட்டில், வலிமை என்பது ஒரு சிறு மெல்லிய மலருக்குக்கூட இருக்கிறது! ஒரு மென்மையான அனிச்ச மலர் தருகிற இன்பமும், கம்பீரமான ஒரு பெரிய கோவில் தருகிரி இன்பமும்—இரண்டுமே வலிமையாகத்தான் இருக்கின்றன!'' என்ருன் கமலக்கண்ணன்.

இந்தத் தருணத்திலேதான் முத்துமேகலை உரக்கச் சிரித்தாள். அந்த உபவனத்தின் இதயத் துடிப்பாக ஒலிக்கும் ஓடையின் மெல்லிய நாதம் போலவும், வன மகளின் பாதச் சிலம்பொலி போலவும் மேகலையின் பூங்குமுதச் செவ்வாயிலிருந்து நகை மலர்கள் உதிர்ந்தன! அப்படியே எழுந்து புனலின் கரையோரமாக நடந்தாள் அவள்.

''விவாதம் முடியவில்லையே இன்னும்?''என்ருன் அயன்.

''இல்லை. இந்த விவாதத்துக்கு முடிவு செய்ய வேண்டியவள் மேகலைதானே!'' என்ருன் பரஞ்சோதி.

"பார்க்கலாம்; இந்த விவாதத்துக்கு நீங்களே ஏதாவது முடிவு செய்கிறீர்களா என்று..."

இவ்வாறு சொல்லிக் கொண்டே மேலே நடந்தாள் முத்துமேகலை. நட்சத்திரங்கள் உதிர்வது போல உதிர்ந்த அந்தச் சொல் மலர்களை மனக் கூடையில் தாங்கினார்கள் இரண்டு கலைஞர்களும்.

2

நிலவுத தீவின் உபவனம் ஒரு கலைக் கூடமாக மாறியது. சோலை நெடுகிலும் மேகலையின் வடிவங்கள். அவள் நடப்பது போலவும், நிற்பது போலவும், எதையோ கூர்ந்து நோக்கிக் கொண்டிருப்பது போலவும், சிரிப்பது போலவும்—அழகிய ஒரு நங்கையின் வண்ண வண்ணச் செயல்கள் எத்தனை உண்டு, அத்தனையும்—கல்லிலே கோலம் பெற்றுச் சோலையை நிரப்பி நின்றன! சிற்பி அயனுடைய கை வண்ணங்கள் அவை!

சோலையிலே நின்ற அந்த உருவங்கள்—அத்தனை உருவங்களுக்கும் மத்தியிலே கவிதையும் பூத்திருந்தது. அந்தச் சிலை ஒவ்வொன்றின் பாதத்திலும் ஒரு ஏடு. அவள் நடந்து செல்வதைப் பாடுவதும், நின்று சொக்குவதைச் சித்திரிப்பதும், சிரிப்பதை வர்ணிப்பதும், பார்வையின் கூர்மையைப் புகழ்வதுமாக—மேனியிலே வனப்பு பொங்கிக் கொண்டிருக்கிற ஒரு பேரழகிக்கு எத்தனை செயல்கள் உண்டு, அத்தனை செயல்களையும் வெறி வீசும் பாடல்களிலே கூறி மோகித்து நின்றன அந்த ஏடுகள்! கவிஞன் பரஞ்சோதியின் சொல் வண்ணங்கள் அவை!

கல்லும் சொலலும் காதலிலே வெறியாகித் தங்கள் தங்கள் வலிமையை நிலை நாட்டப் போராடின, அந்த உப வனத்திலே!

அரிய ரசிகனான கமலக் கண்ணனே, இந்த ரசமான கலைப் பின்னலில் இதயத்தை ஊடவிட்டு, இந்தப் பின்னலின் சரடாக இழையும் ரூபவதியின் எழிலை வியந்து மௌனமாக மயங்கினான்!

மீண்டும் அந்தப் பாதச் சிலம்பொலி; நட்சத்திர மலர்கள் உதிர்வது போன்ற மெல்லிய சிரிப்பு, ஓடையின் அருகே ஒலித்தது. முத்துமேகலை அங்கு வந்தாள்.

"மேகலா, சொல்லம்மா. கல்லும் சொல்லும் உன்னையே துதிக்கின்றன. எதை நீ கொள்ளு கிறாய்?" என்றான் சிற்பி.

அப்பொழுது அவளுடைய மோகனச் சிரிப்பை வர்ணிக்கும் ரம்யமான பாடல் ஒன்றை உணர்ச்சி மிகுந்த குரலிலே பாடினான் பரஞ்சோதி, சிற்பத் துக்குப் போட்டியாக!

"பார்க்கலாம், நீங்களே இந்த விவாதத்துக்கு ஒரு முடிவு செய்கிறீர்களா என்று!"

இப்படிச் சொல்லியவளாய் புனலின் கரை யிலே நடந்தாள் மேகலை.

கமலக் கண்ணன் இந்தக் காட்சியில் தன்னை மறந்து நின்றான்.

## 3

நிலவுத் தீவு பௌர்ணமியின் அமுத எழிலில் நீராடிக் கொண்டிருந்தது! நிசப்தமான உபவனத் தில் அந்த நேரத்தில் சிலைகளுக்கு எதிரே நின்று மௌனமாகக் கண்ணீர் வடித்தான் கமலக் கண்ணன்! நேற்றுக் காலையில் அழகழகான கோலங் களில் அற்புதமான வனப்பு வடிவங்களாய் இலங் கிக் கொண்டிருந்த வண்ணச் சிலைகள், என்ன ஆச்சரியம், இப்பொழுது உடைந்து கிடைந்தன!

யார் இந்த அக்கிரமத்தைச் செய்திருக்கக் கூடும் என்று அவன் யோசித்தான்!

"பொறாமைதான் எத்தனை கொடுமையானது!" என்று எண்ணினான் அவன்!

"கல் அழியக் கூடியது என்று காட்டுவதற்காக பரஞ்சோதி—ஒரு கவிஞன்—இந்தக் காரியம்செய்ய முடிந்தது என்றால் அவனுடைய அழகுணர்ச்சியை என்ன சொல்வது! பொறாமை என்பது கலையுணர்ச்சியை விட வலிமையானதா!"

இவ்வாறு தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான் கமலக் கண்ணன். அப்பொழுது அந்தச் சோலையில் சிலம்பொலி கேட்டது. திரும்பிப் பார்த்தான். யாரோ வேகமாக மலர்ச் செடிகளுக்கு மத்தியில் மறைந்து செல்வது தெரிந்தது.

உபவனத்திலிருந்து புன்முறுவலுடன் வேகமாக நடந்தாள் முத்துமேகலை.

4

மறுநாள் இரவும் அதே நேரத்தில் அந்தச் சோலையிலே நின்று கண்ணீர் வடித்தான் கமலக் கண்ணன். ஆனால் இந்த முறை சிலைகளுக்காக அல்ல. கவிதைகளுக்காக; கல்லுக்காக இல்லை: சொல்லுக்காக!

ஆமாம்: அந்த உபவனத்தின் புல்வெளி முழுதும் ஏடுகள் கிழிந்து சிதறிக்கிடந்தன. இந்த அக்கிரமத்தை யார் செய்திருப்பார்கள் என்று யோசித்தான் அவன்.

"ஒன்று நிச்சயம், கல்லும் சொல்லும் எவ்வளவு வலிமையானவையோ தெரியாது. மனித உள்ளத்தின் ஆணவம் இந்த இரண்டையுமே மிஞ்சிவிடக் கூடியது!" என்றான் கமலக் கண்ணன்.

மீண்டும் அந்தச் சிலம்பொலி. திரும்பிப் பார்த்தான். மேகலை! அவள் மறையவில்லை. உபவனத்திலிருந்து வெளியே செல்லவில்லை. இவனை நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

“யார்—மேகலையா?” என்று கேட்டான் கண்ணன்.

“ஆம். இந்தப் போட்டிகளுக் கெல்லாம் காரணமான குற்றவாளி! மனிதனுடைய ஆணவத்தின் அதிசய விளையாட்டுக்களைக் கண்டு ரசித்துக்கொண்டிருக்கிறேன்” என்ருள் அவள்.

“நானும் ரசித்துக்கொண்டுதான் இருந்தேன். ஆனல் இப்பொழுது கண்ணீர் வடிக்கிறேன்” என்ருன் கமலக் கண்ணன்.

“இதற்குக் கண்ணீா வடிப்பானேன்? விவாதத்தின் ஒரு கட்டந்தானே இது! முடிவு நெருங்குகிறது என்று அர்த்தம்!”

சிலையிலே உருவாக்க முடியாத அமுத தாரைகளைப் பொழிந்து கொண்டிருந்தது நிலவு. சொல்லுக்குள் அடங்காத மொழியிலே பாடிச் சென்று கொண்டிருந்தது சிற்ருேடை. கண்ணன் மேகலையின் முகத்தைப்பார்த்தான்.

“சிலைகளுக்கு இப்படிச் சிரிக்கத் தெரியுமா? ஏடுகள் என்னேடு இப்படிப் பேசுமா?” என்று கேட்டான் அவன். ஐவகை இன்பமும் “ஒண்டொடி கண்ணே உள” என்ற கவியின் வாக்குக்குப் பதவுரையும் பொழிப்புரையுமாக இருந்தது அந்த நிலை!

“என்னென்னவோ சொல்கிறீர்களே, புதிதாய் இருக்கிறதே!” என்ருள் முத்துமேகலை.

“மன்னிக்க வேண்டும். சிரிக்காமல் சிரிப்பதும், பேசாமல் பேசுவதுந்தானேகலையின் சிறப்பு. அதை மறந்து விட்டேன்!” என்ருன் அவன்!

முத்துமேகலை அந்த நிலவின் சோபையிலே, மெல்லிய காற்றில் ஓடுகிற தனது கேசத்தை ஒரு மித்து முடிந்தாள்.

''ஏதோ ஒரு போதையில் கலையின் அடிப்படையை மறந்து விட்டேன். என்னுடைய புத்தி மயங்கி விட்டது!'' என்றான் கமலன்.

மேகலை அவனுக்கு அருகிலே வந்து நின்றாள். குளிரும் தென்றல், வாசனைப் பூங்கொடி, சுவைமிக்க தீங்கனி, கண் நிரம்பிய முழுமதி, செவிக்கு இனிய நல்லிசை இந்த ஐந்தின்பங்களும் ஒன்று பேசிக் கலந்து உருவெடுத்து அவன் கண்முன்னே நிற்பது போல இருந்தது, முத்துமேகலை தன் எதிரே வந்து நின்ற நிலை!

''நீங்கள் அழகை ரசிப்பவர்கள். விவாதிப்ப தில்லை!'' என்று சொல்லிச் சிரித்தாள் மேகலை.

விவரிக்க முடியாத ஒரு பேருணர்ச்சி கமலனை உலுப்பியது. அவன் சொன்னான்:

''மேகலா, உன்னுடைய நிலைமைக்கு அநுதாபப் படுகிறேன். சிற்பியும் கவியும் உன்னை மனப்பூர்வமாகக் காதலிக்கிறார்கள். அதனாலேதான் இத்தனை போராட்டம். அது எனக்கு நன்றாய்த் தெரியும்.''

''இருக்கலாம்—ஆனால் அப் போராட்டத்தில், அதன் லக்ஷ்யத்தை மறந்து விடுகிறார்கள். விவாதம் அதிகமாகி விவாதப் பொருள் மறைந்து விட்டது!'' என்றாள். மறுபடியும் அந்த மெல்லிய சிரிப்பு.

'நிலவின் கிரணங்களுக்கு ஒலி என்று ஒன்று இருக்குமானால், அது இப்படித்தான் இருக்கும்'— என்று எண்ணமிட்டான் கமலன்.

ஒரு விநாடி மௌனம் நிலவியது. அவன் கேட்டான்:

"நீ என்ன நினைக்கிறாய் மேகலா, கல் வலிமை யானதா அல்லது சொல் வலிமையானதா ?"

"என் வரையில் இப்பொழுதுள்ள நிலையில், இந்த இரண்டையும் விட வலிமையானது மனித உள்ளத்தின் பாசம்"

"அப்படியானால் ?"

"அப்படிப்பட்ட ஒரு உள்ளத்தைத் தேடித் தான் இதுவரை அலைகிறேன். இல்லை அலைந்தேன்!" என்றாள் முத்துமேகலை.

"நீ சொல்வது புரிந்தும் புரியாமலும் இருக் கிறது—மேகத் திரைக்குப் பின்னால் தோன்றுகிற சந்திரன் மாதிரி, சல்லாத் திரைக்குப் பின்னால் அசைகிற அழகிய ஒரு பெண் மாதிரி."

"அயனும் பரஞ்சோதியும் தங்கள் ஆணவத்தை நிலை நாட்ட என்னை ஒரு கருவியாக ஆளுகிறார்கள். அவர்களுடைய வலிமையை மெய்ப்பிக்க நான் ஒரு சாதனமாக உதவுகிறேன். அவ்வளவுதான். எனக் காகவே என்னை விரும்புகிற இதயம் அவர்கள் இரு வரிடமுமே இல்லை!"

"மேகலா! இதெல்லாம் உண்மையா! இந்த ஒளி மிகுந்த குளிர்ந்த நிலவும், மனசை மயக்குகிற இந்த உபவனமும், என் முன்னே இந்த இனிய மொழியில் உரையாடும் நீயும்—மேகலா, என்னுடைய புத்தி மறுபடியும் மயங்குகிறதே—"

கமலனுடைய வார்த்தைகள் சற்றுத் தடு மாறின. உணர்ச்சி என்பது ஒரு நிலையில் கல்லையும் சொல்லையும் கடந்துவிடுகிறது என்பதை அவன் அப்பொழுது உணர்ந்தான்.

"மேகலா கல்லையும் சொல்லையும் அநுபவித்துக் களித்தேன். அவை உயிர் பெற்று மனித உருவில்

வந்தால் எப்படியிருக்கும் என்பதை இப்பொழுது உணர்கிறேன்.''

தன்னை மீறிய அந்த உணர்ச்சியின் சுழிப்பில் ஆழ்ந்தவனாய், அவன் நிலவின் ஒளியில் முத்துமேகலையின் கரங்களைப் பற்றினான். சிற்றோடை நட்சத்திர ஒலிகளை உதிர்த்துக் கொண்டே 'சல சல' வென்று ஓடியது.

## 5

முத்துமேகலையைக் கமலக்கண்ணன் கேட்டான்:

''எல்லாம் சரி: அயன் செய்த சிற்பங்களைப் பரஞ்சோதி அழித்ததும், பரஞ்சோதி பாடிய பாடல்களின் ஏடுகளை அயன் கிழித்தெறிந்ததும் நினைத்தால் தான் மனம் வேதனைப்படுகிறது!'' முத்துமேகலை பளிச்சென்று பதில் சொன்னாள்:—

''இல்லை. அவற்றைக் கிழித்தது அவர்கள் இருவருமே இல்லை. அவர்களுடைய ஆணவத்தை ஒடுக்க முனைந்த நான்தான் அந்தப் பாவம் செய்தேன்! வேறு வழி எனக்கு புரியவில்லை. ரசிகராகிய நீங்கள் என்னை மன்னித்து விடுங்கள்!''

## 6

''எங்கள் இருவருக்கும் நல்லாசி கூறுவதுதான் உங்கள் கடமை'' என்று சொன்னாள் முத்துமேகலை.

உருத் தெரியாத ஒரு பெரும் மயக்கத்தில் சிந்தை இழந்தவர்களாய்க் கலைஞர்கள் இருவரும் அந்த உபவனத்தின் நாலு திசைகளையும் பொருளற்று நோக்கினார்கள்.

''உங்களுடைய கலையாக்கும் ஆணவத்தில் என்னை மறந்து விடுகிறவர் நீங்கள்!'' என்றாள் மேகலை.

பரஞ்சோதி கலங்கிய கண்களால் அவளைப் பார்த்தான். அவள் மேலும் பேசினாள்:

"என்னை நீங்கள் காதலிப்பது உண்மை. ஆனால் என்னைவிட உங்களையே நீங்கள் அதிகமாகக் காதலித்துக் கொள்கிறீர்கள்!"

அயன் உளியைக் கீழே எறிந்துவிட்டு மேகலையை நோக்கிக் கேட்டான்.

"உன்னைவிட அதிகமாக என்னையே நான் காதலிக்கிறேனா?!"

"ஆமாம், என் அழகைவிட அந்த அழகை உருவாக்குகிற உங்கள் கைவண்ணத்தை நீங்கள் அதிகமாக வியக்கிறீர்கள். அது இயல்புதான். ஆனாலும் கலைஞனுடைய அந்த ஆணவத்தில் ஒரு பெண்ணின் இதயம் பொசுங்கி விடுகிறது! இப்படிச் சொல்வதற்காக என்னை மன்னிக்கவேண்டும்!"

பரஞ்சோதியும் அயனும் அந்த வார்த்தைகளை மனந்திறந்து வாங்கினார்கள். பரஞ்சோதி சொன்னான்:

"உண்மை; நீ சொல்லுவது ஒரு பேருண்மை: ஆனால் முடிவு எத்தகைய ஏமாற்றம் எங்களுக்கு."

இதுவரை மௌனமாக இருந்தகமலக்கண்ணன் இப்பொழுது பேசினான்:

"நிறைவேறாத காதல் பூர்த்தியாகாத ஒரு கோபுரம்; அரைகுறையாக நின்ற ஒரு காவியம்; அதற்கு ஒரு தனியான கவர்ச்சி உண்டு. ரசிகனுடைய உள்ளத்தின் கற்பனைக்குத் தக்கவாறு மன உலகில் அது பூரணம் பெறுகிறது."

பரஞ்சோதியின் முகத்தில் ஒரு புன்முறுவல் தோன்றியது. அதில் மகிழ்ச்சி இல்லை. வருத்தம்

இல்லை. கோபம் இல்லை. ஏமாற்றம்கூட இல்லை. அப்பொழுது மேகலை சொன்னாள்:

"உங்களுக்கு உபதேசம் செய்கிறேன் என்று எண்ணாதீர்கள். நான் தேடிய பொருள் எனக்குக் கிடைத்து விட்டதால் ஏற்பட்டுள்ள ஒரு தெளிவிலிருந்து பேசுகிறேன். ஏமாற்றம் என்று நீங்கள் அழைக்கிற இந்த அநுபவம் உங்கள் கலைக்கு ஊக்கம் தருகிற மன எழுச்சியாக உதவட்டும் என்பதுதான் என் ஆசை! வாழ்க்கை அநுபவத்தில் என் சுய நலத்தை மன்னித்து விடுங்கள்."

அயனும் பரஞ்சோதியும் பேசினார்கள். அவர்களுடைய குரலில் நிதானம் இருந்தது:

"உங்கள் இருவருக்கும் எங்களுடைய மனம் நிரம்பிய வாழ்த்துக்கள். உங்கள் காதலைக் கல் பேசும். சொல் பாடும். உங்கள் காதல் வாழ்க!"

# மோக்ஷப் பாதை

*தலைப்பைப் பார்த்ததும் மோக்ஷமாவது பாதையாவது, எல்லாம் வெறும் பொய் என்று சொல்லுகிற மெய்யன்பர்களுக்குத் தலைப்பிலேயே ஒரு விஷயத்தைக்கூறிவிட விரும்புகிறேன். இந்தக் கதை பொய்; இதில் வரும் பாத்திரங்கள் பொய்; இதில் தோன்றும் 'நரக பூமி' 'ஸ்வர்க்க லோகம்' எல்லாம் வாஸ்தவமாகவே பொய்கள்; இந்தப் பொய்யான உலகத்தில் இவை யாரையும் எதையும் குறிப்பிடுவன அல்ல என்ற ஒரு உண்மையை மட்டும் நினைவு படுத்திக்கொண்டு இனிப் பொய்யைத் தொடருவோம்.*

* * *

ஓய்வு பெற்ற டிப்யூடி கலெக்டர் உலகநாத பிள்ளை வீட்டுக் கதவைத் திறந்தார்—அதாவது, திறக்க முயன்றார். பூட்டு 'மக்கார்' செய்தது!

"பூட்டைத் திறப்பதும் கையாலே—மனப்
பூட்டைத் திறப்பதும் மெய்யாலே
வீட்டைத் திறக்க முடியாமல்—விட்ட
விதி விதி என்பார் ஞானப்பெண்ணே."

என்று பாடியவண்ணம் அந்தச் சமயம் பார்த்து வாசல் முன்னால் வந்து நின்று கையை நீட்டினான் ஒரு கால் இல்லாத பண்டாரம்.

"போடா. போ. ஆறு அவுன்ஸிலே நீ வேறே பங்குக்கு வந்துட்டியா" என்று அவனைத் துரத்தியவாறு மீண்டும் பூட்டிலே கவனத்தைச் செலுத்தி வீட்டைத் திறக்க முயன்றார் ஸ்ரீமான் பிள்ளை.

இந்த முப்பத்தைந்து வருஷ ரெவின்யூ வாழ்க்கையில் இதுவரை அந்தப் பூட்டை அவர் பூட்டிய

தும் கிடையாது; திறந்ததும் கிடையாது. தம்முடைய விதியின் நிழலுக்குத் துணை நிழலாகத் தம்மை விடாது பின் தொடர்ந்து வந்த வில்லைச் சேவகனே இந்த மாதிரிச் சிறிய காரியங்களையெல்லாம் இதுவரை செய்து வந்திருக்கிறான். ஆனால் இப்பொழுது?

இப்பொழுது ஸ்ரீமான் உலநாத பிள்ளை ஓய்வு பெற்றுவிட்டார். இனிமேல் விதியின் நிழல்தான் அவரைப் பின்தொடர வேண்டுமே அல்லாமல், வில்லைச் சேவகன் வரமாட்டான். இன்று காலை மனைவியைத் தாயார் வீட்டுக்கு அனுப்பும்போது அந்த ட்ரங்குப் பெட்டியைக்கூட அவரேதான் தூக்கி ரயில் வண்டிக்குள்ளே வைத்தார்: வண்டி வந்ததும் பெட்டி படுக்கைகளை ஏற்றி வைத்துவிட்டுப் போகும்படி சொன்னதைக்கூட அந்தப் போர்ட்டர் லக்ஷியம் செய்யவில்லை! போய் விட்டான்! வில்லைச் சேவகனா பக்கத்தில் நிற்கிறான்?

"ஹூம்! அந்த வில்லை இருக்கிறதே வில்லை. அதற்குள்ள மதிப்பே தனிதான்" என்று சொல்லிக் கொண்டே தமக்குள் ஒரு சிரிப்புச்சிரித்தார் பிள்ளை. பூட்டு திறந்து கொண்டது!

2

மனைவியை ஊருக்கு அனுப்பிவிட்டு வந்த அந்த நிமிஷத்திலிருந்து உலகநாத பிள்ளை இந்த வாழ்க்கை ஆடம்பரங்களை எண்ணி எடைபோட ஆரம்பித்தார். கடந்த முப்பத்தைந்து வருஷமும் அவர் எத்தனை அந்தஸ்த்துடன் இந்த 'ப்ரவின்யூ' என்ற கருங்கடல் சூழ்ந்த நில உலகத்தில் வளைய வந்திருக்கிறார். எத்தனை பேர் மேல்துண்டை இறக்கிக் கையிலே தொங்கப் போட்டுக்கொண்டே அவரை வளைய வளைய வந்திருக்கிறார்கள், இந்த முப்பத்தைந்து வருஷத்திலும்! இனிமேல்?

உலகநாத பிள்ளை யோசனை செய்ய ஆரம்பித் தார், மனிதனுக்கு மதிப்பா, அல்லது அவனுடைய உத்தியோகத்துக்கு மதிப்பா என்று! எதிரே காபி டம்ளரைக் கொண்டு வந்து 'டக்' கென்று வைத்துத் தம்முடைய ஏகாந்த விசாரத்துக்கு ஒரு பெரிய முற்றுப்புள்ளி வைக்கக்கூடிய மனைவியோ ஊரில் இல்லை. எனவே பிள்ளையவர்களின் யோசனை படிப் படியாக அதிகரித்து மனிதன் என்ற இந்த உடம் புக்கு என்ன மதிப்பு என்ற ஞான விசாரத்திலே சென்றது. "இந்த இக உலகம் மனிதனுடைய உத்தியோகத்தையே மதிக்கிறது. உண்மையில் மனிதனை அவனுடைய உண்மையான மதிப்புக்காக மதிப்பிடுவது இக லோகத்தில் இல்லை; அது அடுத்த உலகத்திலேதான்!" என்று நினைத்தார் ஸ்ரீமான் உலகநாதர்.

ஆமாம், மனிதனுக்கு மதிப்பு அடுத்த உலகத் திலேதான். அப்படியென்றால் அடுத்த உலகத்தில் தன்னை மதிக்கும்படி இதுவரை தாம் என்ன காரியம் செய்திருக்கிறார்?

மளிகைக் கடையிலே வருஷ முடிவில் 'ஐந் தொகை' எடுப்பது போல, தனக்குள்ளேயே இந்த முப்பத்தைந்து வருஷத்திற்கும் ஒரு வரவு செலவு போட்டுப் பார்த்தார். காலை ஒன்பது மணிக்கு டிபன்பாக்ஸுக்குள்ளே இரண்டு இட்டிலியைத் திணித்து வைத்துக்கொண்டு புறப்படுவதிலிருந்து இரவு ஏழுமணிக்குத் தலைக்கிறக்கத்துடனும் இரண்டு கட்டுப் பழைய பைல்களுடனும் திரும்புகிறது வரை பாப புண்ணியங்களை வரவு செலவிலே அடக்கிக் கணக்குப் போட்டார். ரெவின்யூ இன்ஸ்பெக்டராக 'For Approval' போட்டதிலிருந்து, முதல் வகுப்புத் துணை மாஜிஸ்ட்ரேட்டாகி 'ஜட்ஜ்மென்ட்'கள் எழுதி யது வரை ஒரு ஓட்டம் நினைவுகளை ஓடவிட்டுப் பார்த்தார் பிள்ளை. முடிவில் என்ன செய்தார்?

அன்று மாலை ஸ்ரீமான் உலகநாத பிள்ளை கோவில் வாசலிலே பரத்திப் போட்டிருக்கும் ஞானக் கடையிலிருந்து ஒரு 'ஞானக் கோர்வை' (கோவைக்கு ஒரு இர்ரன்னுப்போட்ட திருத்தமான பதிப்பு!) வாங்கி வந்தார். அந்த நிமிஷத்தில் ஆரம்பித்து அவருடைய நடை உடை பாவனைகள் மாறத் தலைப்பட்டன.

"தூலத்தை விட்டுவி டாயாகில்—அதில்
சூட்சத்தைக் காண முடியாது
பாலத்தில் ஏறி நடந்தாக்கால்—பெரும்
பாதை இதல்லவோ ஞானப் பெண்ணே!"

என்பார்; அப்படியே கண்ணீர் வடிப்பார். 'இந்த உலகம் பொய்' என்று ஒரு முறை சொல்வார். 'இந்த ஆசை பொய்' என்பார். "இந்த வீடு பொய். இந்த உடம்பு பொய். நான் இதோ என் மனைவிக்கு எழுதுகிற இந்தக் கடிதம் பொய்" என்பார். அடுத்த கணம் அந்தக் கடிதத்தைச் சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டு விட்டு, 'இந்த பௌண்டன் பேனாவும் பொய்' என்று சொல்லி விம்மி அழுவார்!

"பாம்பிருக்குது புற்றுக்குள்ளே—சக
பந்தம் இருக்குது நெஞ்சுக்குள்ளே
வீம்பை அடக்கி உயர்தாக்கால்—பரி
வேடிக்கை பார்க்கலாம் ஞானப் பெண்ணே!"

என்று பாடிப் பாடி ஸ்ரீமான் உலகநாத பிள்ளை அவர்கள் நாட் கணக்காக மனைவிக்குக் கடிதம் எழுதாமலே இருந்து விடுவார்!

3

அன்று கடைசி வெள்ளிக் கிழமை. 'வைகறைத் துயில்' எழுந்து ஸ்நானத்தை முடித்து விட்டுப் பிள்ளையவர்கள் பூஜை மடத்திலே உட்கார்ந்து ஞானக் கும்மியைப் பாராயணம் பண்ண ஆரம்பித்தார்.

"குதிரை கட்டிய லாயத்திலே—மனக்
கோட்டையி லேசந்தைப் பேட்டையிலே
எதிரி தான்வந்து தட்டுகிறுன்—இதை
ஏதென்று கேளடி ஞானப் பெண்ணே".

என்று சொல்லி முடித்திருப்பார். யாரோ கதவைத் தட்டுகிற சத்தம் கேட்டது. பிள்ளை கும்மியைக் கொஞ்சம் நிதானித்தார். சத்தம் நிற்பதாகக் காணேம். "இதென்னடா சனியன்!" என்று சொல்லிக்கொண்டே எழுந்தார்.

கடைசி வெள்ளிக்கிழமையல்லவா? சனியன்கள் என்று சொல்லிக்கொண்டே வந்த பிள்ளையின் கண் முன்பு ஒரு அச்சடித்த தாளை நீட்டினுன் அந்த ஊமை. முன்பெல்லாம் வில்லேச் சேவகனே விரட்டி அடித்திருப்பான் இந்த ஊமைகளை! இப்பொழுது என்ன செய்வது! கதவையே தட்டிப் பிச்சை கேட்கிற நிலைமைக்கு வந்துவிட்டது தம்முடைய பிழைப்பு!

"போடா போ போ!" என்று சொல்லிக் கதவைப் படாரென்று சாத்திவிட்டு உள்ளே வந்தார். மறுபடியும் ஞானக் கும்மியைத் தொடர்ந்தார்.

'குரு விருப்பது நெஞ்சுக் குள்ளே—மனக்
கோணல் அறுப்பதும் தன்னுக்குள்ளே'

என்ருர்.

'ஸா......ர்' என்று யாரோ கூப்பிட்டார்கள். உலகநாதர் இந்தத் தடவை நிதானிக்கவில்லே, பாட்டை மேலும் ஒரு முறை மடக்கினுர்.

'குரு வீருப்பது நெஞ்சுக்குள்ளே'

'ஸா......ர்' என்று மறுபடியும் கேட்டது குரல். உலகநாதர் ஒரே எரிச்சலோடு எழுந்தார். கதவைத் திறந்தார்.

'க்ஷயரோக நிவாரண நிதி' என்று சொல்லிக் கொண்டே ஒரு ஆசாமி தகர உண்டியலைக் கிலுக்கினான். ஸ்ரீமான் பிள்ளை அவனை முறைத்துப் பார்த்தார்.

"தீர யோசித்தால் இந்த உலகத்தில் ஒவ்வொரு மனிதனும் ஒரு க்ஷயரோகிதான்" என்று அந்த உண்டியலைப் பார்த்தவாறு ஒரு மகத்தான உண்மையைத் தூக்கி எறிந்துவிட்டுக் கதவை ஓங்கி அடித்தார் உலகநாதர்! மறுகணம் 'ஞானக் கோ(ர்)வை' ஒவ்வொரு பக்கமாகச் சுழல ஆரம்பித்தது!

4

"பிள்ளையவாள். இப்படி, இப்படி!" என்றான் அந்த மனிதன். அவன் காட்டிய பாதையைப் பார்த்தார். 'நரக பூமி' என்று கொட்டை கொட்டையாக எழுதி ஆறடி உயரக் கம்பத்திலே, இரண்டு கை அகலத்தில், மாட்டியிருந்தது. பாதையும் மிக மிக விசாலமான பாதையாக இருந்தது!

"அட, தள்ளப்பா நான் ஸ்வர்க்கத்துக்குப் போகிறவன்!" என்றார் பிள்ளை உதாசீனமாக.

"இல்லை. இல்லை. உங்கள் பாதை இதுதான்—நல்ல விசாலமான பாதை!" என்றான் மறுபடியும்.

உலகநாத பிள்ளைக்கு அவனை எங்கோ பார்த்த ஞாபகம். தலையைச் சொறிந்தார். நினைவு வந்துவிட்டது. அன்றைக்குப் பூட்டைத் திறக்க முயன்று தவித்தபோது ஞானக்கும்மி பாடிப் பிச்சை கேட்டானே அதே நொண்டிப் பண்டாரந்தான் இவன்.

"போடா, உனக்கென்ன தெரியும். நான் பழைய உலகநாத பிள்ளை இல்லை. ஞான வெட்டியான், ஞான மாஜிஸ்ட்ரேட் உலகநாதன்!" என்று சொல்லிக் கொண்டே குறுகலான சின்னஞ் சிறு சுவர்க்கப் பாதையிலே திரும்பி மேலே நடந்தார்

இதோ மீண்டும் யாரோ தடுத்தார்கள்—ஏறிட்டுப் பார்த்தார். ஒரு ஊமை. 'போகாதே' என்று வாய்திறந்து வார்த்தைகளினால் சொல்லக்கூட முடியாத ஊமை.கையைக் காட்டி வழிமறித்தான் அவன்! உற்றுப் பார்த்தார் பிள்ளை. அன்று அச்சடித்த தாளை நீட்டிக் காண்பித்துப் பிச்சைக் கேட்டானே அதே பேர்வழி.

ஓய்வு பெற்ற முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட் உலகநாத பிள்ளையவர்களுக்குக் கோபம் வந்தது. இந்த வாயற்ற பயல் நம்மை என்ன சுவர்க்கத்துக்குப் போகாதே என்று தடை செய்வது என எண்ணிய வண்ணம், அவனை ஒரு தள்ளுத் தள்ளிவிட்டு ஸ்வர்க்கப் பாதையிலே மேலே நடந்தார்.

இதென்ன விந்தை! இன்னொரு பேர்வழி! இமையாமல் பார்த்தார் அவனை. அன்று க்ஷயரோக நிவாரண நிதிக்கு என்று உண்டியலைக் கிலுக்கினனே அதே ஆசாமிதான் சந்தேகமில்லை!

"நகராதேயும் பிள்ளையவாள். அநுமதி இல்லாமல் நுழைகிற பழக்கம் இந்த மேல் உலகத்தில் இல்லை. காம்ப்ளிமென்ட்ரி டிக்கட்டுகள் இங்கே செல்லாது!"

உலகநாதர் அவனைப் பார்த்தவாறு,

"வாசலிலே ஒரு மேல் வாசல்"

என்று ஞானக் கும்மியை ஆரம்பித்தார்.

"பிள்ளையவாள்! பாட்டுப் பாடி ஏய்க்கிற காரியத்தை ஸ்வர்க்க பூமிக்குள் அநுமதிப்பதில்லை. தயவு செய்து நடவுங்கள் திரும்பி!"

உலகநாத பிள்ளைக்குக் கோபம் வந்தது. எப்படிப் பட்ட பாட்டு தான் சொல்ல வந்த பாட்டு! அந்த அருமை இந்த முரடனுக்கு எப்படித்தெரியும்!

"ஏய் என்னைப் பற்றி என்ன வேண்டுமானலும்

சொல்; இந்தப் பாட்டைப் பற்றி ஏதாவது சொன்னே......'' என்று சொல்லிக்கொண்டே அவனை நெருங்கினார் பிள்ளை. அவனோ, இவருடைய பாட்டுக்கு எதிர்ப்பாட்டாக,

''அன்பர் பணி செய்ய''

என்று வேறொரு பாடலைப் பாட ஆரம்பித்து விட்டான்!

5

'படார் படார்' என்று கதவு தட்டும் சத்தம் கேட்டுப் பதறி விழித்தார் உலகநாதபிள்ளை. கையிலே விரித்துப் பிடித்திருந்த 'ஞானக் கோ(ர்)வைப்' புத்தகம் கீழே நழுவிக் காலில் விழுந்தது. அந்த அவசரத்திலும் கால் பட்டுவிட்டதே என்று புத்தகத்தைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டே, வெளியே ஓடிவந்து கதவைத் திறந்தார். அதிசயம்! மனைவி நின்றுகொண்டிருந்தாள். தெருவிலே வண்டியும் வண்டிக்காரனும்!

''போட்ட காயிதத்துக்கெல்லாம் பதில் இல்லேண்ணு, எனக்கு எப்படி இருக்கும். ஹும்! எப்படி இருக்குமாம்?''

உலகநாத பிள்ளை திகைமுட்டுகிற ஒரு புன் சிரிப்பை முகம் முழுவதுமாகச் சிரித்தார்!

''எந்த ரயிலுக்கு வர்றேன்னு ஒரு லெட்டராவது போட்டிருக்கக்கூடாதா?'' என்று ஒரு இங்கிதத்துடன் வார்த்தைகளை இழுத்தார் பிள்ளை.

''போதும் போதும். நான் ஒருத்தி வீட்டிலே இல்லேண்ணு ஒங்களுக்குப் புத்தியே இராதே!'' என்று தீர்மானத்துடன் சொன்னாள் அம்மாள்!

மோக்ஷத்தில் தமக்கு ஒரு இடம் 'ரிஸெர்வ்' செய்கிற மும்முரத்தில், இக உலகத்திலே பிறமனிதர்கள், மனைவி உள்பட-படும் வேதனைகளுக்கெல்லாம்

கதவைச் சாத்திவிட்ட பிள்ளையவர்கள், தம்முடைய புத்தியைப் பற்றி மனைவி கூறிய அபிப்பிராயத்துக்குப் பதிலே பேசாமல் நிலை வாசலில் நின்றார்.

'அன்பர்பணி செய்ய எனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்ப நிலை தானே வந்து எய்தும் பராபரமே!'

என்ற பாட்டுத்தான் அவருடைய மனத்திலே வட்டமிட்டுக் கொண்டிருந்தது!

"சரி சரி! வண்டிக்காரனுக்குச் சில்லறையைக் கொடுத்து அனுப்புங்க" என்று நினைவுபடுத்தி, மோக்ஷப் பாதையிலிருந்து உலகநாதரை இந்த உலகத்துக்குக் கொண்டுவந்தாள் அவருடைய வாழ்க்கை நாயகி!

# கம்பி மத்தாப்பு

கிழவியின் மனம் கவலைப்பட்டது.

பூக்கட்டி விற்றுச் சேர்த்த பணத்தில் அன்ருடச் செலவுபோக என்ன மீந்துவிடப் போகிறது! வயிற்றை வாயைக் கட்டித் தன்னுடைய உண்டியற் பெட்டியிலே போட்டு வைத்திருந்த காலணுக்களை ஒவ்வொன்ருக எண்ணிப் பார்த்தாள். நான்கு ரூபாய் மூன்றே முக்கால் அணு இருந்தது. பயலுக்கு ஒரு துண்டு; அந்தச் 'சிறுசு'க்கு ஒரு பாவாடை. இவை இரண்டுக்கும் இந்தப் பணம் போதுமா?

கிழவி, கிழிந்துபோன தனது வெள்ளைப் புடவையை—ஒரு காலத்தில் வெள்ளையாயிருந்த புடவையை—கிழிசல்போக மீதியிருந்த இடத்தில் ஊசியைக் கொடுத்துத் தையல் போட்டுக்கொண்டு, பேரனையும் பேத்தியையும்—பாவம், தாயில்லாக் குழந்தைகள் - கூட்டிக் கொண்டு கடைத் தெருவுக்குப் போனுள். ஜவுளிக் கடைக்காரனைக் கையைக் காலைப் பிடித்துக் கெஞ்சி ஒரு வகையாகத் தன்னுடைய தீபாவளிக் கொள்முதலை முடித்துக் கொண்டு வீடு திரும்பினுள்.

விடிந்தால் தீபாவளி!

"தாயம்மே!" என்று கூப்பிட்டாள். இப்பொழுதுதான் வீட்டுக்கு வந்தது, அதற்குள்ளே அந்தச் 'சிறிசு', வெளியே போய்ப் பண்ணையார் வீட்டிலே பட்டாசு விடுவதைப் பார்த்துக்கொண்டு நின்றது! மறுபடியும் கூப்பிட்டாள். பதிலையே காணும்.

முருகையா உள்ளே வந்தான்.

"ஆச்சி...ஆச்சி" என்று சிணுங்கினான்.

"ஆச்சி, தங்கச்சிக்குக் கம்பி மத்தாப்பு வேணு மாம்......அழுதா!" என்றான்.

கிழவி தன்னுடைய தளர்ந்துபோன கண்களை மேலே எடுத்து முருகையாவைப் பார்த்தாள். முருக னும் தன்னுடைய ஆச்சியின் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றான்.

தாயம்மைக்குக் கம்பி மத்தாப்பு வேண்டும்; எதிர் வீட்டில் பண்ணையார் மகள் பாப்பா கம்பி மத்தாப்புத்தான் கொளுத்திக் கொண்டிருந்தாள்!

கிழவிக்குக் கம்பி மத்தாப்பு என்றதும் விஷயம் புரிந்துவிட்டது. தன்னுடைய தாவர ஜங்கம சொத் துக்கள் அத்தனையும் அன்றைக்குக் கொள்முதலில் சரியாகிவிட்டன. இனி கம்பி மத்தாப்புக்கு என்ன செய்வது? கிழவிக்குக் கண்ணீர்தான் வந்தது!

முருகையா சிறு பயல்தான். ஆனால் அவ னுடைய மூளை ஏழைமை என்ற சாணையிலே பிடித்து நன்றாகக் கூர்மையாகி யிருந்தது. ஆச்சியிடம் அவன் அதற்குமேல் ஒன்றும் பேசவில்லை. வெளியே வந்து விட்டான். 'தாயம்மைக்குக் கம்பி மத்தாப்பு வேண்டும். கிழவியிடமோ பணம் கிடையாது. தங்கச்சியோ பிடிவாதக்காரி. ஒரு மத்தாப்பு இரண்டு மத்தாப்பைக் கொண்டு கொடுத்தால் தூக் கித் தூர எறிந்து விடுவாள். ஒரு பெட்டி மத்தாப் புக் கொடுக்க வேண்டும்!'—முருகன் தன்னுடைய நெற்றியைப் பலமாகப் பிசைந்து யோசனை பண்ணி னான்.

## 2

இரவு பத்து மணியிருக்கும். மறு நாள் தீபாவளி யானதால் விடியற்காலமே எழுந்திருக்க வேண்டும் என்று பண்ணையார் வீட்டில் இப்

பொழுதே எல்லாரும் படுத்து விட்டார்கள். பட்டாசுகளின் ஓசை ஒடுங்கிக் குறட்டை பலமாகக் கேட்டுக் கொண்டிருந்தது. முருகையா வராந்தா வுக்குள் வந்துவிட்டான்.

காவற்காரன் காளிமுத்து பகல் முழுவதும் கடை கண்ணிக்கு அலைந்த அலைப்பில் இடி விழுந் தால்கூட யாரோ 'புஸ்' வாணம் விடுகிருர்கள் என்று மறுபக்கம் திரும்பிப் படுத்துக் கொள்ளக் கூடிய நிலையில் சயனித்திருந்தான். முருகன் பண்ணையார் வீட்டின் வராந்தாவையும் தாண்டி உள்ளே அடியெடுத்து வைத்தான்.

ஜன்னலின் மறுபக்கத்தில் வீட்டினுள் கவு தத்தின்மேல் பட்டாசுக்கட்டு இருந்தது. வராந்தா வில் நின்று கொண்டே ஜன்னல் வழியாகக் கையை விட்டு அதை எடுத்துவிடலாம்தான்! முருகனுக்கு நன்ருய்த் தெரியும்: அந்த பொட்டலத்துக்குள்ளே டஸன் டஸனைக் கம்பி மத்தாப்பு இருந்தது!

முருகனுக்கு ஒரு சூரத்தனம் வந்து விட்டது. துணிச்சலாகக் கையை நீட்டி அந்தப் பட்டாசுக் கட்டைக் கம்பி வழியாக இழுத்தான். ஆனல் அந்த இடைஞ்சல் பிடித்த பட்டாசுக் கட்டு கம்பி வழியாக வரமாட்டேன் எனச் சாதித்து விட்டது!

முருகனுக்கு ஒரே எரிச்சலாகப் போய்விட்டது. இனி, பொட்டலத்தை அவிழ்க்காமல் வெளியே இழுப்பது முடியாத காரியம். 'இரண்டு கையையுமே ஜன்னல் வழியாக உள்ளே கொடுத்து அந்த முடிச்சை ஒரு சுண்டுச் சுண்டி, கம்பி மத்தாப்பை மட்டும் வெளியே எடுத்துவிட்டால் என்ன?'

முருகன் வேகமாக ஆரம்பித்தான். அந்த முடிச்சை ஒரு உலைப்பு உலைத்துவிட்டுப் பலமாகச் சுண்டி இழுத்தான். 'டபார்' என்றது பொட்டலம்.

அதற்குள்ளே இருந்த ஒரு கல்வெடி வெடித்து, முருகனைக் காட்டிக் கொடுத்துவிட்டது!

இதன் பிறகு என்ன நடந்தது என்று சொல்லவாவேண்டும்! பண்ணையார் போட்ட சப்தத்தில் அந்த நரகாசுரன் காளிமுத்து பதறிப்போய் விழித்தான்! மறு கணம் அந்த வீடு முழுவதும் எதிர்பாராத 'எதிரி'யின் முற்றுகையைச் சமாளிக்க அணி வகுத்துப் புறப்பட்டது. முருகன் அகப்பட்டுக் கொண்டான்.

'இந்தத் திருட்டுப் பயல் முருகனை என்ன செய்வது?' என்ற தீவிரமான பிரச்னையில் ஆழ்ந்துகொண்டே, அவனைக் கையையும் காலையும் பிணைத்துத் தூணிலே கட்டிப் போடும்படி கட்டளையிட்டுவிட்டு வீட்டிற்குள்ளே போனார் பண்ணையார்.

இதுவரை நடந்துகொண்டிருந்த இத்தனை நாடகங்கள் எதிலும் சம்பந்தப்படாமல் எட்டி நின்ற ஓர் ஜீவன் அந்த வீட்டில் உண்டு என்றால், அது இந்தப் பட்டாசுக் கட்டுக்கு ஏகபோக உரிமை கொண்ட பாப்பாதான்! அவள் இப்பொழுது வெளியே வந்தாள்.

போன வருஷம்வரை அவளோடு முருகன் கண்ணைம்பொத்தி விளையாடியிருக்கிறான். எனவே அவளைக் கண்டதும் அடக்க முடியாத பயமும், விவரிக்க ஒண்ணாத ஒரு வெட்கமும் முருகனை வதைத்தன. ஆனால் நடந்தது என்ன? முருகன் அதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை! அப்பா வீட்டுக்குள் போனாரோ இல்லையோ, பாப்பா என்ன செய்தாள்? ஜன்னலுக்கு மேலே இருந்த அந்தப் பட்டாசுக் கட்டிலிருந்து கம்பி மத்தாப்பு டப்பா ஒன்றை எடுத்தாள்.

"இந்தாடா, முருகா! தாயம்மைக்குக் கொண்டு போய் கொடு. எங்க அப்பாகிட்டே மட்டும் சொல்லி

டாதே" என்று சொல்லிக்கொண்டே கம்பி மத்தாப்பை அவன் பக்கம் நீட்டினுள்!

அதை வாங்குவதற்கு முருகையனுக்குக் கை ஏது? அதைத்தான் காலோடு கொண்டு இணைத்துத் தூணிலே கட்டிப் போட்டிருந்தாரே, பண்ணையார்!

இக்கட்டான இந்த நிலைமையில் முருகையன் 'திரு திரு' என்று விழித்துக் கொண்டிருந்தபோது, உள்ளே சென்றிருந்த பண்ணையார் இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டே வெளியே வந்தார். அவருக்கு ஒரே திகைப்பாய்ப் போய்விட்டது!

மனத் தத்துவத்தை ஆராய்ந்து முடிவு காணுகிற புத்தகங்கள் நூறுயிரம் படித்து மூளை காய்த்துப் போயிருந்த பண்ணையாருக்கு அப்பொழுதுதான் தமது மகளுடைய மனம் புரிந்தது! அவர் ஒன்றுமே பேசவில்லை. முருகனுடைய கைக் கட்டுகளை 'விறு விறு' வென்று அவிழ்த்தார். அந்தக் கம்பி மத்தாப்புப் பெட்டியை அவன் கையிலே கொடுத்துக் கொண்டே ஒரு குழந்தையின் மனத்தைத் தமக்கு அருளும்படி இறைவனைப் பிரார்த்தனை செய்தார் அவர்!

விடிந்தால் தீபாவளி : தாயம்மையின் கையிலிருந்து கம்பி மத்தாப்பு பொறி பொறியாக ஒளி விட்டுச் சிதறியது!

# பசுவும் கன்றும்

காந்திமதிபுரம் பண்ணையார் ஒரு கலைப்பித்தர். அவர் இந்த உலகத்தைவிட்டுப் பிரிந்தபொழுது ஒரு பெரிய கலைக்களஞ்சியத்தை வைத்துவிட்டுப் போனார். அவர் வீட்டுப் 'பட்டாசாலை' தான் அந்தக் களஞ்சியம்.

அர்த்தமற்றவைபோல் தோன்றுகின்ற—ஆனால் அர்த்த புஷ்டியுள்ள—வடதேசத்துச் சித்திரங்கள் அறையின் வடக்குச் சுவரை அலங்கரிக்கின்றன. 'நமது செல்வத்'தின் வளத்தை மிகவும் துலாம்பரமாய் எடுத்துக் காட்டும் தென்னாட்டுச் சித்திரங்கள் தெற்குச் சுவருக்கு அழகு தருகின்றன. வேடிக்கையான மேல் நாட்டுச் சித்திரங்கள் மேலச் சுவரிலும், விசித்திரமான சீனச் சித்திரங்கள் கீழச் சுவரிலும் தொங்குகின்றன.

இவை தவிர, கணக்கற்ற ஆண்டுகளாகச் சிற்பிகளின் உள்ளத்தில் மறைபட்டுக் கிடந்த சிந்தனைகள் உருவெடுத்தனவாகப் பல விக்கிரங்கள், பளிங்கு போன்ற கல்லிலும் மரத்திலும் திறம்படக் கடைந்தெடுக்கப்பட்டவை, அறையில் அங்கங்கே அழகாக வைக்கப்பட்டுள்ளன.

உயர்ந்த ஜாதி 'வெப்பாலை' மரத்தில் கடையப்பட்ட பல பொம்மைகளுக்குள் என்னை மிகவும் கவர்வது ஒரு பசுதான். தும்பைச் சுற்றிக்கொண்டுவந்து, கன்று மிகப் பதற்றத்தோடு மடியை முட்டிப் பால் குடிக்கிறது. பசு தன் கழுத்தை வளைத்துச் சாய்த்துக் கொண்டு கன்றைப் பரிவோடு நக்கிக் கொடுக்கிறது. இந்த அருமையான காட்சியைத்தான் மரத் தச்சன் அழகான உருவத்தில் வடித்திருக்கிறான்.

இந்த அற்புதமான பொம்மையைப் பார்க்கும் நண்பர்கள் எல்லாரும், அதை மிகவும் வியந்து ரசிப்பார்கள். எனக்கும் இதைக் காணும்போதெல்லாம் ஒரு சிந்தனை ஓடும். 'பசுவும் கன்றும் போலத்தான் கலைஞன் உள்ளமும், ரசிகன் உள்ளமும். கன்றுக்குப் பால் எவ்வளவு ருசியோ, அவ்வளவு ருசி ரசிக உள்ளத்துக்குக் கலா அமுதம். உண்மையில் கன்றை நோக்கிப் பால் சுரக்கும் பசுவைப் போலத் தான், ரசிகனை நோக்கிச் சிந்தனை அமுதை வழங்குகிறது கலைஞன் உள்ளம். பாலைக் குடித்துக் கன்று வளர்வதுபோல், கலா அமுதை அருந்திப் பண்படுகிறது ரசிக உள்ளம்' என்றெல்லாம் பலவாறு எண்ணமிடுவேன்.

ஒரு நாள், பண்ணையாரிடம் கேட்டேன் "இந்த பொம்மையை எப்படி, என்ன விலைக்கு வாங்கினீர்கள்?" என்று. அவர் அந்தக் கதையை விவரமாகச் சொன்னார்.

## 2

வடிவேலன் ஒரு கைதேர்ந்த மரத் தச்சன். அவனுடைய தொழில் நாற்காலியும் மேஜையும் செய்வதன்று. அவன் ஒரு கலைஞன்.

ஒரு சாதாரண மரத் தச்சனா யிருந்திருந்தால் வாழ்க்கை கஷ்டமில்லாமல் நடந்திருக்கலாம். ஆனால், அவன் அப்படியில்லையே!

அவனுடைய மனைவி கோமதி "ஏதாவது சம்பாதித்து வா" என்று அடிக்கடி மிகவும் தொந்திரவு செய்வாள். கலையைப்பற்றி, அவளுக்கென்ன? கத்தரிக்காய் இல்லையே என்றுதான் கவலை! "நாற்காலி மேஜை செய்தாலும் ஏதாவது கிடைக்கும். இந்தப் பாழாய்ப்போன தொழிலில் தம்பிடி பிரயோஜன முண்டா?" என்று மிகவும் மனம் புழுங்கிக் கூறுவாள். வடிவேலுக்கும் இது தெரி

யாமலில்லை. ஆனாலும், அவன் உள்ளம் வெறும் நாற்காலி மேஜைகள் செய்வதில் ஈடுபடவே மறுத்தது. அப்படி அவன் செய்தாலும் அவை கலைப் பொருள்களாகவே அமைந்தன: உபயோகப்படக் கூடிய விதத்தில் மலிவான வெறும் மேஜை நாற்காலிகளாக அமையவில்லை!

பொம்மைகள் செய்வான். எங்கெல்லாமோ அலைந்து சிரமப்பட்டு விற்க முயல்வான். மிகக் குறைந்த விலைக்குத்தான் போகும். அந்தப் பணத்தைக் கொண்டுதான் ஜீவனம்!

## 3

ஒரு நாள் வடிவேலனுடைய வீட்டுக்கு நாலைந்து விருந்தாளிகள் வந்து விட்டார்கள். வடிவேலனால் என்ன செய்ய முடியும்? எங்கு போய்ப் பணம் சம்பாதிப்பான்? விற்பதற்கோ கையில் வெகு நாளாகப் பாடு பட்டுச் செய்த அந்தப் பசு ஒன்று தான் இருந்தது. ஒருதரம் அவன் ஒரு தாயின் வாஞ்சையையும் குழந்தையின் அவசரத்தையும் கண்டு அதை உருவகமாக்க முயன்றதன் விளைவு அது. அந்தத் தாயின் ஞாபகம் அவனுக்கு வர வேறு பல காரணங்களும் இருந்தன. ஆனால் அது வேறு கதை.

"இதை விற்றுவிட்டு வாயேன்" என்று கோமதி சொன்னாள். அவ்வளவுதான். வடிவேலன் அவளை அடிக்கவே வந்துவிட்டான். "இதன் அர்த்தம் உனக்கென்ன தெரியும்? நான் எவ்வளவு சிரமப்பட்டிருக்கிறேன் இதற்கு என்று, உனக்குத் தெரியுமா? உயிர் போனாலும், இதைக் கொடுக்கவே மாட்டேன். இந்தப் பசு நம் வீட்டை விட்டுப் போனால், வீட்டிலுள்ள லக்ஷ்மியே போய்விட்ட மாதிரி" என்று மிக்க ஆத்திரத்தோடு வடிவேலன் சொன்னான்.

"ஆமாம்; இப்பொழுது, நம் வீட்டில் லக்ஷ்மி கொலுவிருக்கிருளாக்கும்" என்ருள் கோமதி. இதைக் கேட்டதும் வடிவேலன் கண்கள் சிவந்து விட்டன. கோமதி பேசாது போய்விட்டாள்.

எப்படியும், விருந்தாளிகளிடம் மதிப்பை விட்டுக்கொடாமல் நடந்து கொள்ள வேண்டு மென்ருள் கோமதி. "கடைக்காரனிடம் கடன் சொல்லி ஏதாவது வாங்கி வருகிறேன்" என்று வடிவேலன் கடைத்தெருவுக்குச் சென்ருன்.

அவனுக்கு ஒருவரும் கடன் கொடுக்கமாட் டார்கள் என்று கோமதிக்கு நன்ருய்த் தெரியும். 'அவர் பாட்டுக்கு என்ன வேண்டுமானலும் சொல் லிக்கொள்ளட்டும். நாம் எங்காவதுபோய் இதை விற்றுவிட்டு வருவோம். அப்படிச் செய்தால்தான் இன்றையப் பாடு கழியும்' என்று கருதி, கோமதி அந்தப் பொம்மையை எடுத்துக்கொண்டு ரத வீதி சென்ருள்.

அநேக 'ரசிக சிகாமணிகள்' அந்தப் பொம்மை யின் வாடையே ஒத்துக்கொள்ளாது என்று சொல்லிவிட்டார்கள். கடைசியாகக் கோமதிபண்ணை முதலாளி வீட்டிற்கு வந்து "பொம்மை விலைக்கு வேண்டுமா?" என்று கேட்டாள். அப்பொழுது பண்ணை முதலாளி எங்கோ வெளியேபோயிருந்தார். உள்ளே கை ஜோலியாயிருந்த அம்மாள் "வேண் டாம்" என்று சொல்லிக்கொண்டே பொம்மையைப் பார்வையிட வந்தாள். இதற்குள் பண்ணை வீட்டுக் குழந்தைகளும் 'நான் நீ' என்று பொம்மையை மொய்த்துவிட்டன. பண்ணை எஜமானிக்கும் பொம் மையைப் பார்த்ததுமே 'நவராத்திரி இன்னும் இரண்டு மாதத்தில் வந்துவிடுமே; அப்போது கொலுவில் வைப்பதற்கு ஒரே ஒரு பசுமாடுதானே இருக்கிறது; ஜோடியாக வைக்கலாமே!' என்று ஆசை உண்டாயிற்று.

"என்ன விலை?" என்று கேட்டாள்.

கோமதி "ஆறு பணம்" என்று சொன்னாள். அவளுக்கு என்ன தெரியும் அந்தப் பொம்மையின் மதிப்பு?

"நாலு பணத்திற்குத்தருகிறாயா!" என்று சாவதானமாகக் கேட்டாள் அம்மாள். கோமதிக்கு அந்தப் பொம்மை நாலு பணம்கூடப்பெறாது என்று நினைப்பு. எனவே, குதூகலத்தோடு பொம்மையைக் கொடுத்துவிட்டு நாலு பணம் வாங்கிக் கொண்டு விரைவாக வீடு திரும்பினாள்.

4

"கடன் கொடுக்க மாட்டேன் என்று சொல்லி விட்டான் கடைக்காரன்" என்று முனகிக்கொண்டே வடிவேலன் வீட்டிற்கு வந்தான். "விருந்து சமைத்தாய் விட்டது" என்றாள் கோமதி.

வடிவேலன் திடுக்கிட்டுப் போனான். கோமதி நடந்த விஷயத்தைச் சொல்லவே, அவனுக்கு அசாத்யக் கோபம் வந்துவிட்டது. "பண்ணை முதலாளி நாலு கோடிப் பவுன் தந்தாலும், நான் அதைக் கொடுத்திருக்கமாட்டேனே!" என்று கோபித்துக் கொண்டான். அவன் திண்ணையில் நின்று கொண்டு இப்படி இரைந்த வார்த்தைகள், அப்பொழுது வீதி வழியே போய்க்கொண்டிருந்த பண்ணையாரின் காதில் விழுந்தன.

உடனே பண்ணையார் வீட்டிற்கு விரைவாக வந்து தன் காதில் விழுந்ததைத் தம் மனைவியிடம் சொன்னார். பொம்மையைப் பார்த்துவிட்டு "அவன் இவ்வளவு கஷ்டப்பட்டுச் செய்ததை இந்த விலைக்கு வாங்கியது மிகவும் பாவம்" என்று கோபித்துக் கொண்டார்.

5

"வடிவேலா! இதோ உன் பொம்மை. நீ இவ்

வளவு சிரமப்படும்படியாக இதை என் மனைவி நாலு பணம் கொடுத்து 'விலைக்கு' வாங்கிவிட்டது தவறு. இந்தா இதை நீயே வைத்துக்கொள். உனக்கு ஏதாவது பணம் தேவையானால் சொல்லு. நான் தருகிறேன்'' என்று சொல்லிப் பொம்மையை வடிவேலனிடம் கொடுத்தார்.

வடிவேலனுக்குப் பண்ணையார் தன் குடிசைக்கு வந்ததும் இப்படி வார்த்தைகள் சொன்னதும் ஆச்சரியமாயிருந்தன. தன்னுடைய பொம்மையை எவ்வளவு அநுபவத்திருந்தால் அந்த ரசிகர் அப்படிச் சொல்லுவார்—வடிவேலனுக்குப் பரவசத்தினால் கண் கலங்கியது.

''இந்தப் பொம்மை உங்களிடமே இருக்கட்டும்........'' என்றான் வடிவேலன் மெதுவாக. ''இதைப் பிரிய மனமில்லாததால் நீயே வைத்துக்கொள்'' என்றார் பண்ணையார். உடனே வடிவேலன் பதில் பேசாது அந்த பொம்மையைப் பண்ணையாரிடம் கொடுத்துவிட்டுச் சொல்லுவான்:

''நீங்கள் விலைக்கு வாங்கிய பொம்மையை நான் திரும்பப் பெற்றுக் கொண்டுவிட்டேன்......இப்பொழுது இதை என்னுடைய அன்பின் அறிகுறியாக ஏற்றுக்கொள்ள வேண்டும். இதன் மதிப்பு தங்களுக்குத் தெரிந்திருக்கிறது. இதற்கு உரியவர் தாங்கள் தான்!''

# கிளை நதி

"புரூரவஸுடைய மூன்றாவது குமாரனான அமவசுவின் வம்சத்தில் நூறு சகோதரர்களுடன் காதிராஜன் என்று ஒரு பிரசித்தமான அரசன் இருந்தான். அந்த அரசனுக்கு இரண்டே இரண்டு குழந்தைகள்-ஒரு புதல்வனும் ஒருபுதல்வியும்."

இவ்வாறு அன்றைய உலகோடு சற்றும் சம்பந்தம் இல்லாதது போலத் தோன்றுகிற-ஆனால், நெருங்கிய தொடர்புள்ள-ஒரு கதையைத் தொடங்கினார் விசுவாமித்திரர்.

அயோத்தி மன்னன் தசரத சக்கரவர்த்தியின் செல்வக் குமாரர்களான ராமனும் லக்ஷ்மணனும் ராஜரிஷியின் பேச்சிலே ஈடு பட்டவர்களாய், தாடகை வதத்தின் களைப்பையும் நடையினால் உண்டான சிரமத்தையும் மறந்து மிதிலை நோக்கி விரைந்தார்கள். எதிரே சரயு நதி குறுக்கிட்டது. அங்கே இன்னொரு கிளை நதி வந்து கலக்கும் ஒலியைக் கேட்டு ராமன் திரும்பிப் பார்த்தான். ஓர் இளம் பெண்ணைப்போல ஒல்கி வந்து கொண்டிருந்தது கௌமதி நதி.

"அதுதான் புனிதமான கௌமதி நதி. பாவங்களையெல்லாம் போக்கக் கூடியதும் ஞானிகள் எல்லாரும் வணங்குவதுமான புண்ணிய நதி!" என்று சொல்லும்போதே, விசுவாமித்திரரின் குரல் கம்மியது. அதைச் சரிப்படுத்திக்கொண்டு கதையைத் தொடர்ந்தார்.

"காதி ராஜனுக்கு இரண்டு குழந்தைகள்—ஒரு புதல்வனும் ஒரு புதல்வியும். அந்தப் புதல்விக்குப்

பெயர் சத்தியவதி. அபாரமான அழகு படைத்தவள். சீலத்திலே ஒப்புயர்வற்றவள். அவளுடைய உள்ளத்தைப் பரிசுத்தமான தண்ணீர் நிரம்பி ரம்யமாகக் காட்சிதரும் ஓர் அழகியதடாகத்துக்குத்தான் உவமை சொல்ல வேண்டும். ஆழ்ந்த அறிவோடு தூய சிந்தனையும், அடக்கமும் பாசி படராத எழிலும் வாய்ந்தவள் அந்த உத்தமி !

"இப்படிப்பட்ட குணவதியான சத்தியவதியை மகா தபஸ்வியான பிருகுரிஷியின் குமாரர் இரிசிகர் மணந்துகொள்ள விரும்பினர். விரும்பிக் காதி ராஜனிடமே நேரில் சென்று விண்ணப்பித்தார். காதி ராஜனுக்கு ரிஷி குமாரரிடம் சிறப்பான அன்பும் மரியாதையும் உண்டு மகளைக் கொடுக்க விருப்பந்தான். ஆனலும் வழக்கம் எப்படி என்ருல், மணமகன் மணமகளுக்கு அன்பளிப்பு—'சுருள்'—வழங்க வேண்டும். அதைக் கேட்டார்.

"செவி மட்டும் பசுமையாகவும், உடம்பெல்லாம் பரிசுத்த வெண்ணிறமாகவும் கூடிய ஆயிரம் குதிரைகள் கொண்டுவந்து கொடுத்தால் என் மகளை மணந்து கொள்வதில் ஆட்சேபம் இல்லை!' என்ருர் காதி ராஜன் !"

காதி ராஜனுடைய இந்த நிபந்தனையைக் குறிப்பிடும்போது விசுவாமித்திரர் புன்முறுவல் செய்து கொண்டார். ராம லக்ஷ்மணர்களிடம் ஒரு சமாதானம் கூறினர்: "இரிசிகரோ முனிவர். எப்பொழுதும் தவத்திலேயே நிற்பவர். இது காதிராஜனுக்கு நன்ருகத் தெரியும். எனவே இப்படிப்பட்ட ஒரு ரிஷி குமாரருக்குத் தம் மகளிடம் உண்மையான பற்றுத் தீவிரமாக இருக்கிறதா என்று தந்தை தெரிந்துகொள்ள வேண்டாமா? அதனலேதான் இந்த மாதிரி ஒரு பரீட்சை செய்து பார்த்தார் காதி மன்னர்" என்று கூறிவிட்டு ராமனைக் கடைக் கண்ணல் பார்த்துக் கொண்டே விசுவாமித்திரர்

சொல்லலானார்: "பொதுவாக ஒரு சிறந்த பெண்ணை மணப்பது என்றால் இப்படி ஏதாவது ஒரு பரீட்சையில் தேறியே ஆகவேண்டும்!"

லக்ஷ்மணன் கேட்டான்: "செல்வங்களையெல்லாம் துறந்த ஒரு முனிவரிடம், ஆயிரம் குதிரைகள் வேண்டும், அவையும் உடம்பெல்லாம் வெண்மையாகவும், காது மட்டும் பசுமையாகவும் உள்ளனவாக இருக்க வேண்டும் என்று கேட்டால் முடிகிற காரியமா? பெண்ணைப் பெற்றவர்கள் என்ன நிபந்தனை வேண்டுமானாலும் போட்டுவிடலாமோ?"

விசுவாமித்திரர் சிரித்தார்; சொன்னார்: "அரசகுமாரர்களே! தவத்தினால் ஆகாத காரியமே இல்லை. ஞானம் என்ற விலை மதிப்பில்லாத நிரந்தரச் செல்வமே தவத்தினால் சித்திக்கும்போது, கேவலம் ஆயிரம் குதிரைகள் கிடைப்பதுதானா அரிது?"

ராமன் கேட்டான்: "அப்படியானால், ரிஷி குமாரருக்கு ஆயிரம் குதிரைகள் கிடைத்தனவோ?"

"ஆமாம். வருணனை நோக்கித் தவம் செய்து அவனிடமிருந்து ஆயிரம் குதிரைகள் வரமாக அடைந்தார் அவர். சத்தியவதியைப் போன்ற பேரழகியை மணப்பதற்காக ஆயிரம் குதிரைகள் என்ன, அறுபதினாயிரம் ஆனைகள் கேட்டிருந்தாலும் அவர் தயங்கியிருக்க மாட்டார். வருணன் இல்லாவிட்டால், இந்திரனையே நோக்கித் தவமிருந்து வரம் பெற்றிருப்பார். சத்தியவதியிடம் அவருக்கு அத்தனை பற்று இருந்தது!"

"அத்தோடு அத்தனை தவ வலிமையும் இருந்தது அவருக்கு!" என்று மகிழ்ச்சியோடு சொன்னான் ராமன்.

லக்ஷ்மணன் கதையைக் கூர்ந்து கேட்டான்.

"சத்தியவதியோடு இரிசிகரின் வாழ்க்கை ஆனந்தமும் அமைதியும் நிறைந்ததாய் ஓடியது. பிறகு..."

"பிறகு?" என்று அரசகுமாரர்கள் இருவரும் கவலையோடும் ஆவலோடும் கேட்டார்கள்.

"வாழ்க்கையே அப்படித்தான். பிறகு என்ற கேள்விக்கு மனித அறிவினுல் விடை கண்டுபிடிக்க முடிகிறதா? போகப்போகத்தான் அது புலப்படு கிறது" என்று சொல்லிச் சற்றுத் தாமதித்துவிட்டு முனிவர் தொடர்ந்தார்:

"இரிசிகருடைய தவ மகிமையை உணர்ந்த சத்தியவதியும் அவளுடைய அன்னையும் தவத்தி னுலே தோன்றும் குமாரர்கள் தங்களுக்கு வேண்டும் என்று விரும்பினுர்கள். இதை அறிந்த இரிசிகர் மந்திர மூலமான அவிசைப் பாகம் செய்து இரண்டு கூருக வைத்து விட்டு, நதிக்கு ஸ்நானம் செய்து வரச் சென்ருர். அந்த வேளையில் சத்தியவதி அறி யாத தவறு ஒன்று செய்து விட்டாள். ஆத்திரத் தில், தனக்காக வைத்திருந்த அவிசைத் தன் அன்னைக்குக் கொடுத்துவிட்டு மற்றைக் கூறு ஒன்றை எடுத்துத் தான் அருந்திவிட்டாள்! பாவம், அளுவக்குத் தெரியாது அது!

"நதிக்குக் குளிக்கச் சென்ற முனிவருடைய உள் மனத்தில் விபரீத அலை வந்து மோதிற்று. அவ்வளவுதான். நடந்ததை உள்ளுணர்வினுல் அறிந்து, இரிசகர் அப்படியே நடந்து விட்டார். வீடு திரும்பவில்லை!

"சத்தியவதி கணவருக்காகக் காத்திருந்தாள். பாவம், தான் செய்த தவறு எத்தகையது என் பதைச் சற்றும் அறியாத அந்தப் பேதை அன்றும் மறுநாளும், பின்னும் காத்திருந்தாள். கணவரைக்

காணவில்லை. வீட்டை விட்டு வெளியே வந்து தேடினாள். நடந்து திரிந்து அலைந்தாள். பிரிவும் வேதனையும் குழப்பமும் அவளால் தாங்க முடிய வில்லை. நடந்தாள், நடந்தாள், வடதிசை நோக்கி நடந்துகொண்டே இருந்தாள்!

''சத்தியவதி எத்தனை காலம் இப்படி நடந் தாள் என்று அவளுக்கே தெரியாது. இறுதியில், இமயமலைச் சாரலில் வேகமாகப் படர்ந்து செல்லும் கணவரைத் தொலைவிலே கண்டுகொண்டாள்.

''நில்லுங்கள். எங்கே செல்கிறீர்கள், என்னை விட்டுவிட்டு?'' என்று கதறினாள். அந்த மலை முகடும் பள்ளத்தாக்கும் அவளுடைய வார்த்தை களை எதிரொலித்தன.

" அணுகாதே, என்னை! அவிசின் கூறுகளை மாற்றி விட்டாய். என்னைக் கேளாது செய்த தவறு உன்னை என் அருகிலேயே அணுகாமற் செய்துவிட் டது நில் அங்கே!'' என்றார் இரிசிகர்.

''அந்த ஒரு கணத்திலே தன் தவறு என்ன என்பது சத்தியவதிக்குத் தெரிந்துவிட்டது. அவ் வளவுதான். அந்த உத்தமிக்கு உடம்பெல்லாம் ஜில்லிட்டது. அப்படியே பனிக் கட்டியாக உறைந்து நின்றுவிட்டாள் அவள்!

''அப்படியும் முனிவருக்குக் கோபம் அடங்க வில்லை. 'நில்லாதே அங்கே. சென்றுவிடு. உடனே சென்றுவிடு' என்று கோபக்கனலைக் கொட்டினார் அந்தத் தவமா முனிவர். அந்தக் கோபக் கனலா னது, ஜில்லிட்டுப்போய் நின்ற சத்தியவதி என்னும் பனிக் கட்டியைத் தாக்கி அதை உருக்கிவிட்டது. அப்படியே அந்த இடத்திலிருந்து ஒரு நதி உருகி ஓடி விழுந்தது.

"பரிசுத்தமான தண்ணீர் நிரம்பிய தடாகம் என்று சொன்னேனே, அந்தக் குணத் தடாகமான சத்யவதிதான் இப்பொழுது இந்தக் கௌமதி நதியாக ஓடுகிருள்" என்று கதையை முடித்தார் விசுவாமித்திரர்.

"காதிராஜனுக்கு இரண்டு குழந்தைகள் என்று சொன்னீர்களே, அந்த மகன்?" என்று கேட்டான் லக்ஷ்மணன்.

"ஆமாம், காதி ராஜனுடைய மகள் சத்தியவதி. மகன்தான் விசுவாமித்திரன்!" என்று சொல்லிக் கொண்டே அந்தப் புனித நதியின் தண்ணீரைத் தம்முடைய இரண்டு கையினுலும் வாரி எடுத்தார் விசுவாமித்திரர். அந்தத் தண்ணீரில் சகோதரியின் பிம்பமே அவருக்குத் தெரிந்தது. கலங்கிய கண்களை அந்தப் பவித்திரமான தண்ணீரினுல் குளிர்வித்துக் கொண்டு மேலே நடந்தார்.

கிளை நதியின் சகோதரக் கிளையைப் புரிந்து கொண்ட அரச குமாரர்கள் பக்தி இன்னும் மேலிட்டவர்களாய், அந்தத் தண்ணீரை எடுத்துத் தலையில் தெளித்துக் கொண்டார்கள்!

---



